


அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903௵ ஜூன்௴. [இலக்கம் 2.

THE WAY TO GODLINESS IS THROUGH PURITY OF HEART.

# "அத்தனருள்வேண்டில் அகம்தூயவேண்டும்"

"Our theism is the purification of the human mind"—Emerson.

"அருட்செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம்
* பூரியார் கண்ணுமுள"—திருக்குறள்.

"**அத்தனருள்வேண்டில் அகம்தூயவேண்டும்.**" கடவுள் கிருபைமட்டு முண்டானால் பிறகு இகபர மிரண்டிலும் யாதொரு குறைவுமில்லை. அத்தனருள்பெற்றால் அதன் பயனைச் செத்தபின்னே காணலாமென்பது உலகத்தார் கொண்டுள்ள தப்பெண்ணம். "செத்துப்பிழை" யென்ற அருத்தத்தில் "செத்தபின்னே" யென்பதை யுபயோகித்தால் அப்பொழுது சரிதான். ஆனால் உலகத்தார் கருத்து அதுவல்ல. இந்த உடலைவிட்டு உயிர் போனபின்பே அவனருளின் பயனைக் காணலாமென்பது அவர்களெண்ணம். இது முற்றிலும் தப்பெண்ணம். பரலோகம் என்றால் எங்கோ மேகங்களுக்கப்பாலிருக்குமிடமென்றருத்தமல்ல. மேலான பதவிக்குப் பரலோகம் என்று பேர். "The Kingdom of God is within you"—பரலோகம் உனக்குள்ளேயேயிருக்கிறது என்றார் யேசுகிறஸ்துவும். "மனத்துறைமாகடலேழுங்கைநீந்தி" யென்றதனாலும், "மனத்திடை நின்ற மதிவாளுருவி" யென்றதனாலும், எல்லாம் மனத்துளிருப்பதையே பற்றிச் சொல்லியது விளங்கும். மனிதன்

* பூரியார்-இழிந்தோர், கீழோர்.

தன் சிந்தையிலுள்ளதையே வெளியிலும் காண்கிறான். மனிதன் சிந்தையில் இல்லாததை அவன் வெளியிலும் காணான். ஆகையால் மனப்பயிற்சியாலேயே எல்லா சுகபோகங்களையும் அனுபவிக்கவேண்டியவனாயிருக்கிறான் மனிதன். ஆகையால் மனத்தை நல்வழியில் பயிற்றுவித்தலால் அவன் எல்லா நன்மைகளையும் அனுபவிக்க யோக்கியனாகிறான். நல்வழியிற் செல்லலாவது, பிரகிருதி விதியை யொட்டி நடப்பதாம். மற்றப்படியுள்ள, ஊர்வன, பக்ஷி, மிருகங்களெல்லாம் பிறக்கும்பொழுதே பிரகிருதி விதியை யனுசரித்து நடக்கும் சக்தி இயல்பாக அமையப்பெற்றுப் பிறக்கின்றன. மனிதனோ அவைகளிலும் மேலான சக்தி வாய்ந்தவனாகப் பிறக்கிறான். இந்த மேலான சக்தி அவனுள்ளத்தில் ஒடுங்கிக்கிடப்பது விரிந்து வெளிப்பட்டு வளரக் காலம் செல்கிறது. இந்த வளருங்காலத்தை நன்றாக உபயோகித்தால் மனிதனுடைய மனோதத்துவங்கள் நன்றாக வெளிப்பட்டுச் சோபிக்கின்றன. தாறுமாறாக உபயோகித்தால் அவன் மனோதத்துவங்கள் சோபிக்காது மங்கி மழுங்கி மாண்டுபோகின்றன. அல்லது துர்வழியிற் பிரவிர்த்தித்து ஜன சமூகத்துக்குத் தீங்கிழைப்பதாய் முடிகிறது. ஆகையால் மனிதனுக்கு பால்யப் பிராயத்திலும் வளரும் பிராயத்திலும் அவன் மனதில் என்னென்ன எண்ணங்கள் பதிகின்றனவோ அவைகளே பின்னால்வரும் அவன் மத்திமப்பருவத்திலும் முதிர்பருவத்திலும் வளர்ந்து விர்த்தியாகிப் பலனைக் கொடுக்கின்றன. அத்தனருள் பெறுவதாவது, உலகத்தோடொத்துவாழ்வதாம்; அதாவது பிரகிருதிதர்மத்துக்கு விரோதமின்றி அதை யனுசரித்து இசையும் குரலும்போல், பண்ணும் பாட்டும்போல், பழமும் ரசமும்போல் ஒத்து வாழ்தலாம். "உலகத்தோடொத்துவாழ்" என்று ஔவை சொன்ன வாக்கியத்துக்கு அர்த்தம் இதுவேயன்றி "உலகத்தார் மடைமையினா லனுசரிக்கும் பழக்க வழக்கங்களுக் கடிமையாயிருந்து வாழ்" என்பது அதன் உண்மையான கருத்தல்ல. பொறுத்தார் பூமியாள்வார்; அடக்கமுடையோர் ஆக்கமுடையார்; தானடங்க உலகடங்கும்; தன்னைவென்றார் உலகைவென்றார்;—என்று சொல்லும் பழமொழிகளுக்கெல்லாம் பொதுவாயுள்ள உண்மை யென்னவெனில், பிரகிருதி தத்துவத்தை யுணர்ந்து அதை அனுசரித்து நடப்பார், எல்லா இடையூறுகளையும் வென்றவராவார் என்பதாம். பிண்டத்திலுள்ளதே அண்டத்திலுமிருப்பதால், பிண்டத்தில் பிரகிருதி தத்துவத்தை யுணர்ந்தவன் அந்தப் பிரகிருதி தத்துவம் எங்கிருப்பினும் அதை வென்றவனாவான் என்பது கருத்து. கடிகாரயந்திரம் ஓடும் சூக்ஷ்மத்தை யுணர்ந்தவன், ஒரு சிறிய கடிகாரத்தைப் பிரித்துணர்ந்தாலும், அதே ஒழுங்கை யனுசரித்தோடும் மற்றெல்லாக் கடிகார யந்திரங்களின் சூக்ஷ்மத்தையு முணர்ந்தவனாவானல்லவா? அதுபோலவே, பிரகிருதி தத்துவங்களை யொட்டி நடக்க வுணர்ந்தவன் ஒருபொழுதும் அவைகளுக்கு மாறாக நடக்கமாட்டானாதலால், அவற்றா லவனுக்கு இடர்நேரக் காரணமில்லை. பிரகிருதி தத்துவங்களை யனுசரித்து நடப்பவன் பிரகிருதியோடொன்றாக ஆய்விடுகிறான்; அப்பொழுது பிரகிருதியினால் அவனுக்குத் தீங்கெப்படி நேரிடும்? நேரிடாதல்லவா! இதுமட்டுமல்ல; பிரகிருதியோடொன்றானவன் அதற்கும் மேலுள்ள ஆத்மதத்துவங்களை யுணரவல்லவனாகிறான். அதை யுணரும்பொழுது, பிரகிருதியைவிட்டுத் தாண்டி அதற்கும் மேலானதும், பிரகிருதிதத்துவங்களை நடத்துவதுமான அவ்வாத்மதத்துவங்களையொட்டி நடக்கிறான். அரசன் சந்நிதி சேர்ந்து அவனால் அங்கீகரிக்கப்படும் வரையில் காவல்காரன் கட்டுக்கொத்துப்போனால் அரசன் சமூகத்திற் சென்ற

பின் காவற்காரனையு மேவலாமல்லவா? அப்பொழுது காவற்காரனுடைய தயவாவது, தாக்ஷிணியமாவது வேண்டியதில்லையே!

அதுபோல நாம் பிரகிருதி வசப்பட்டவராய் நமக்குள் ஒடுங்கியிருக்கும் தெய்வத் தன்மையை நாமே யுணர்ந்து வெளிப்படுத்தக் கூடாதவரையில், பிரகிருதி தர்மத்துக்கொத்து நடந்தால், பிரகிருதி முடிவில் பிரான் சமுகத்துக்கு வருவோம். அவர் சந்நிதியில் வந்த மாத்திரத்தில் அவருடைய கடாக்ஷவீக்ஷணியத்தினுல் அவருடைய திருவருளுக்குப் பாத்திராகிவிடுகிறோம். அப்புறம் நமக்கென்னகுறை! இதையே திருமூலர் பின்வரும் பாவில் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார்:—

“பிரானரு ளுண்டெனி லுண்டு நற்செல்வம்
பிரானரு ளுண்டெனி லுண்டு நன்ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையுமுண்டு
பிரானரு ளாற்பெருந் தெய்வமுமாமே.”

பிரானருளின் மகிமை இத்தன்மைத்தாக அதைப்பெறும் வழிதேடில் அத்துடன் எல்லாச்சிறப்பும் செல்வமும் தன்னுலே கூடவரும். “Seek first the Kingdom of God and its righteousness and all things will be added unto you” என்றதனுல் இதே உண்மையைக் கூறியுள்ளார் யேசுகிறிஸ்துவும். “அத்தனருளையும் அவன் சன் மார்க்கத்தையும் முன்னேதேடு, அதோடு மற்றவையெல்லாம் தாமே சேர்ந்துவரும்.” என்பது அவ்வாக்கியத்தின் பொருள். ஆகையால் உலகில் எப்பொருளைநாடுவாரும் ஈசன் திருவருளை முன்னுலே நாடக்கடவர்களாயிருக்கிறார்கள். அத்தனருள் உண்டானுல், அனைத்துச் செல்வமும் சிறப்பும் உண்டாமாதலால், அது கிடைக்கும் வழியைத் தேடுவதே முக்கியவித்தையாம். மேற்றிசையார் கொண்டாடும் கிண்டர்கார்டன் போதனுமுறையின் மூலக்கொள்கையும் இதுவேயாம். * இது ப்ரேரபெல் என்பவர் ஆராய்ந்து அனுபவத்திற்கண்டு நிரூபித்த வித்யாதத்துவ முறையின் உள்ளுண்மையை உள்ளபடி யறிந்தார்க்குத் தெள்ளெனப்புலப்படும்.

வித்யா போதனையின் நோக்கமே பிரகிருதி தத்துவங்களை யுணர்ந்தனுசரிக்கும் “உலகத்தோடொத்து வாழ்தலாம்” உண்மையை யுணர்ந்தனுஷ்டித்தல்—இதையே வேதாந்த சித்தாந்த வார்த்தையில், “**திருவருட்பேறு**” என்பார்—என்றேற்படவும், அவ்வருட்பேறு பெறும் உபாயத்தை நாடி யாராய்வது 5-வயது முதல் 50-வயது வரையிலுள்ள (வயதினுலும் புத்தியினுலும் சிறிய) மானிடக் குழந்தைகள் எல்லாருக்கும் ஸ்ரீவித்தை போதிக்கப்பயன்படும்பண்புடையதாகுமென்று நினைக்கிறோம். இக்காலத்தில் சோற்றுப்படிப்பே பெரிதாய்ப் பாராட்டப்பட்டு வருகிறது. வயிற்றுப்பிழைப்பை பகைக்ஷிய மாகச்சொல்ல வரவில்லை: ஆனுல் அது பெரிதும் பாராட்டப்பட்டுவருவது உண்மையை உள்ளபடி யாராய்ந்து நோக்குவோருக்கு முறைகேடா

* c. f. Mrs. Courtright, who after a careful exposition of the “essential ideals of the noble educational philosophy of Frederick Froebel”—so widely known by the name “kindergarten”—apologetically addresses the audience as follows:—“If you do not plainly discern its underlying principle, that of “*inner connection*,” complete unity and perfect harmony which should prevail to make life seem to the child a perfect whole (not disjointed parts) as it seeks to adjust itself to the world about it, to nature and more especially *to God*, the fault is entirely my own.”

கப்படுகிறது என்றுமட்டும் சொல்லவந்தோம். வயிற்றுப்பாடே பெரும்பாடென்று வயிற்றுப் படிப்பை ஆத்மவித்தையிலும் பெரிதாகக்கொண்டாடினால், தவசிப்பிள்ளையை தர்மாதிகாரி ஸ்தானத்தில் வைத்துக்கொண்டாடுவதுபோலிருக்கிறது. சமையல்காரன் படித்துக்கொண்டால் தர்மாதிகாரி வயிறுகாய நியாயாதிகாரம் செலுத்துவது கூடாதுதான். ஆனால் அதன் பொருட்டு அவனை தர்மாதிகாரி ஸ்தானத்தில் வைத்துக்கொண்டாடினுலென்னகும். அதுபோலிருக்கிறது இக்காலத்துப் படிப்பு வைபவம். இதனுண்மையை மேற்றிசையாரிப்பொழுது தானுணர்ந்து கிண்டர்கார்டன் முறையை மேன்மேலு மனுசரித்து அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருகிறார்கள். இதனால் வருங்கேட்டை இந்தியாவில் அதிகாரிகளும் ஜனங்களும் உணர்ந்து முணராது போல் நடந்து வருகிறார்கள். ஜனங்கள் சுதந்திரமற்று சுயசிந்தனையற்று அதிகாரிகளிழுத்த வழியில் செல்கிறவர்களா யிருக்கிறார்கள். இப்படி சோற்றுப் படிப்பைக் கொண்டாடி ஆத்மவித்தையை அலக்ஷியம் செய்துவரும் குருட்டுமார்க்கத்தார் கொள்கையைத் திருமூலர் நன்றாகச் சொல்லிக் கண்டித்திருக்கிறார்.

"ஆற்றிற் கிடந்த முதலை கண்டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக்கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத்தவஞ் செய்வார் நூலறியாதவர்
சோற்றுக்கு நின்று சுழல் கின்றவாறே."

வயிற்றுப்பாட்டை நினைத்து வன்கொடுமைக்குட்பட்டு ஆத்மவித்தையை அலக்ஷியம் செய்துழல்வோர், ஆற்றில் கிடக்கிற முதலையைக் கண்டஞ்சியோடிக் கடைசியில் கரடிக்கெதிர் போய் நின்றது போலாகு மென்கிறார் திருமூலதேவர். "கண்டதே காட்சி, கொண்டதே கோலம்: இத்தேகமுள்ளமட்டும் உண்டுடுத்துறங்கிப் புலன் பொறிகளுக்கெட்டின மட்டில் சந்தோஷத்தைத் தேடிக்காலத்தைத் தள்ளினால், பிந்தி வருவது வந்து விட்டுப்போகிறது" என்று இக்காலத்து நாஸ்திகவாதிகள் கொண்டகொள்கையை அறியாத் தன்மையால் அங்கீகரித்து விபரீதவலையில் சிக்கியகொடுமையால், சத்தியங்குறைந்து சன்மார்க்கம் குறைந்து, உள்மதங் குறைந்து, புறமதச்சண்டைகள் வலுத்துச் சனசமூகம் அலங்கோலப்பட்டு ஆயாசமடைந்து உள்ளழுகி உடம்பு வெளுத்து எத்தனையோ பொல்லாத பவரோகங்களுக்காளாகிக் கிடக்கிறது. இதை அந்நியர் அறிந்திலர். நம்மவர் நினைந்திலர். உண்மையுணர்ந்தோர் ஊகித்துணர்ந்தாராயினும் 'ஆண்டிசொல் அம்பலமேறு' மென்று சொல்கிற வழக்கப்படி, அவர் வாக்கைப் பரிபாலனம் செய்வோர் அதிகமாயின்மையால் அவர்கள் முயற்சி பலிக்கப் பல்லாண்டு செல்லுமெனத் தோற்றுகிறது. எறும்பூரக்கல்லுந் தேயுமாதலால் இக்குறையை விடாது சொல்லி வற்புறுத்தி வந்தால் சிறுகச் சிறுக ஜனங்கள் மனதும் மாறுமென்பது நம்துணிபு. ஆகையால் இது விஷயத்தில் சிரத்தையெடுத்துக்கொள்ளும் ஒவ்வொருவரும் இப்பெரிய காரியத்திற் கொத்தாசை செய்தவர்களாவார்கள். முக்கியமாய் இது நமது பிரதமபாடசாலை உபாத்தியாயர்கள் மனதிலும் பெற்றோர் மனதிலும் பட்டு வேரூன்றிவருமேல், நமது தேசத்துக்கு க்ஷேமகாலம் சீக்கிரம் வருமென்று எதிர்பார்க்கலாம். இது நிற்க.

"அத்தனருள்பெற" ஆகவேண்டியதென்ன? பலர் 'பலவித உபாயம் சொல்வார்கள். சிலர் சிவனைத்தொழு என்பார்கள். வேறுசிலர் விஷ்ணுவைப்போற்று என்பார்கள். மற்றும்

சிலர் காளி பூசை செய்யென்பார்கள். இன்னும் சிலர் சத்திபூசை செய்வதே சாதனமென்பார்கள். இதையெல்லாம் ஆராய்ந்து மெய்யென்றுவது பொய்யென்றுவது புகல நினைத்தோமில்லை. "எண்ணினர்க்கெண்ணினவண்ணமிருந்தருள்புரியுமென்னீசன்" மாயாலீலையை யெடுத்துரைக்க வல்லேமல்லேம். எந்தவழியுரைக்கினும் அது சிந்தைவழி செல்வதே யன்றிவேறில்லை. "சிந்தையினுள்ளே சிவனிருந்தானே" யென்றதனலவன் "உள்ளத்துளுள்ளான்" என்பதுண்மையே. ஆகவே சிந்தையை விளக்கின் சிவனைக் காணலாம். "சிந்தையதென்னச் சிவனென்ன வேறில்லை" ஆகையால்,

"அகம்படிகின்ற நம்மையனையோரும்
அகம்படிகண்டவ ரல்லலிற்சேரார்
அகம்படியுள்புக் கறிகின்றநெஞ்சம்
அகம்படி கண்டார் அழிக்கலுமெட்டே."

என்றபடி அகத்துளிருக்கும் நம்மையனை ஆராய்ந்து பாருங்கள். பார்த்தும் விளங்கவில்லையா? ஏன்! அகத்திலுள்ள அழுக்கினல் அறியக்கூடவில்லை. அழுக்கு நீங்கினல் அகம் ஸ்படிகம்போல் விளங்கும். ஆதலால் அகம்தூயப்பாருங்கள். அகத்தூய்மை சித்திப்பதெப்படி? "வாய்மையால் அகந்தூய்மையாம்:" சத்தியவிரத மனுசரித்துவந்தால் அகந்தூய்மையாய்விடும். சத்தியவிரத மனுசரிக்க சத்தியத்தைக் கண்டாரார்? என்பீர்களேல், நம் கருத்தை விரித்துரைப்போம். நாதாந்த, வேதாந்த, போதாந்தமாய் விளங்கும் பரம்பொருளாம் சத்தியத்தை அறிந்திலீராயினும் அந்த சத்தியத்திற் கொண்டுவிடும் வழியைக்காட்டும் நூல் நம் கையிலிருக்கிறது. அந்நூலைக் கைப்பற்றி விடாமலிருப்பதே சத்தியவிரதமாம். அதாவது ஈ யெறும்புமுதல் அண்டபிண்ட ஆகாசங்களெல்லாம், ஜடஜீவனுள்பட அந்த சத்தியத்தினல் கட்டப்பட்டு நிற்கிறது. மணிமாலையில் பல மணிகளையும் ஒன்றுசேர்த்து ஒரு வரிசைக் கிரமமாக நிற்கத் தாங்கிநிற்கும் நூல்போல், இந்த ஜெகமெல்லாம் ஒழுங்குபட நிற்பது அந்த சத்தியத்தினல். அந்த சத்தியத்தை யனுபவத்தாலுணரலாமே யன்றி மற்றப்படி யுரைக்கப்போகாது. அது உரையற்றது; வரையற்றது; பேரற்றது; ஊரற்றது; ரூபமுமற்றது; அதன் பெருமையைக் கூறப்போகாது.

"பெண்ணல்ல வாணல்ல பேடல்ல மூடத்து
ளுண்ணின்ற சோதி யொருவர்க் கறியொண்ணுக்
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக் கேட்டிடும்
அண்ணற் பெருமையை ஆய்ந்தது மூப்பே."

ஆதலால் மனவாக்குக்கெட்டா இச்சத்தியத்தை யுணர வழி, மனவாக்குக்கெட்டின அளவில் உண்மையை அனுசரித்து அதற்கு விருத்தமாய் நடவாமலிருப்பதாம். மனேவாக்குக் காயமாகிற திரிகரணங்களும் பொருந்தத் தாம் சத்தியமென்றுணர்ந்ததை யொட்டி நடப்பவர் மேன்மேலும் சத்தியத்தை யறிந்துய்வார். சத்தியத்தின் பெருமையை நிலை நாட்டுவதற்கென்றேயவதரித்த அரிச்சந்திரன் சத்தியவிரதமிருந்ததை யறியாதார் ஒருவருமில்லை. விசுவாமித்திரர் அவரை ஒரு சிறு பொய்தான் சொல்லச்சொன்னர்; தான் சொல்லிய வாக்கை மறு

த்து ஒரு வார்த்தை சொல்லச் சொல்லி வருத்தினர்; அதற்காக அவரது திரிகரணங்களையும் போட்டு வதைத்தார். அப்பொழுது சத்தியத்தின் மகிமையை யறிந்த அம்மகான் அந்தரிஷிக்கு என்ன சொன்னர்!

"பதியிழந்தனம் பாலனையிழந்தனம் படைத்த
நிதியிழந்தன மினி நமக்குளதென நினைக்கும்
கதியிழக்கினுங் கட்டுரையிழக்கிலேமென்றார்
மதியிழந்து தன்வாயுமிழந்த மாதவன் மறைந்தான்."

மோக்ஷத்தை யிழந்தாலு மிழப்போம் சத்தியத்தை யிழக்கமாட்டோமென்றார். சிம்மாசனதிபதியாக விருந்து சகலபோகங்களையு மனுபவித்துவந்த அரசன் சத்திய விரதத்தைக் காப்பாற்றும் பொருட்டு, நாடிழந்து நகரிழந்து, பெண்டாட்டியைவிற்றுப் பிள்ளையை விற்றுத், தானும் சுடலைகாக்கும் பறையனுக்கடிமையாகி, இத்தனை துன்பங்களும் போதாதென்று தன் குழந்தையின் பிரேதத்தைத் தகனம் செய்யவந்த தன் தர்மபத்தினியைக் கொலைக்குற்றத்துக்காளாக்கித் தன்கையாலே அவளைக்கொலைசெய்யும்படி வந்துநேர்ந்தும், இவ்வளவுக்கு மஞ்சாத நெஞ்சனை சுத்தவீரனும் அரிச்சந்திரன் ஒரு சிறு பொய் சொல்ல அஞ்சினர். அவர் சத்தியம் கடைசியில் அவரைக்காத்தது. அவரைப்பரிசோதித்த விசுவாமித்திர ரிஷி தன் சபதமிழந்து தவமிழந்து அவமானப்பட்டார். சத்தியத்தின் மகிமை யப்பேர்ப்பட்டது! சத்தியத்தைவிட்டு ஏன் இப்படி சிறிதும் விலகாது நிற்கவேண்டுமென்றால், சொல்கிறேம் கேண்மின். சத்தியமாவது காரண காரியமிரண்டையும் பிணைக்கும் நூலாம்; இதை விதியெனினும்சரி, தர்மம் எனினும்சரி, வேறென்ன பெயரிட்டழைப்பினும்சரி. சத்தியவிரதமிருப்பதாவது காரணகாரியங்கள் சம்பவிக்கும் தர்மத்தை விட்டு விலகாது நடப்பதாம். இந்த தர்மம் பிசகினல் நூலில் சிக்கல் விழுந்துபோம்; சிக்கல் விழுந்தால் நாம் வழிதப்பி மயங்கி சுற்றுச்சுழற்சியி லகப்பட்டுத் தடுமாறித்திண்டாட வேண்டும். ஒரு சிறுபொய் சொன்னல் அதை ஸ்தாபிக்க ஆயிரம் பொய் சொல்லவேண்டும். சத்திய வழியில் மனஞ்சென்று சத்தியத்தைக் காண விருப்புற்றோர் சுற்றுச்சுழற்சியிலகப்பட்டுழல மனந்தாளார். அன்றி அசத்தியம் விஷத்துக்குச் சமானம். ஒரு பொய் சொன்னல் அது, ஒரு குடம் பாலை ஒரு சொட்டு விஷம் கெடுத்துவிடுவதுபோல், உள்ளத்திலூறி உடம்பெல்லாம்பரவி ஆத்மதரிசனத்தைக்காணுதபடி மறைத்துவிடும். ஆகையால் பூர்வத்தில் வித்யாபோதனையின் முக்கியாம்சங்களாகக் கொண்டாடப்பட்டுவந்தகொள்கைகள் முக்கியமாய் மூன்று தலைப்பிலடங்கும். அதாவது: (1) கடமையைக் கழித்தல், (2) தைரியத்தைக் கைவிடாமை, (3) உண்மையையுரைத்தல். இந்த மூன்றும் திரிகரண சுத்திக்காஸ்பதமானவைகளாம். கடனைக்கழித்தல் தேகதர்மம், தேகத்துக்குத் திடனைக் கொடுக்கும்; தைரியத்தைக் கைவிடாமை மனோதர்மம், இது மனதைத்திடப்படுத்தும்; உண்மையுரைத்தல் வாக்குதர்மம், இதனல் வாக்குப் பலிக்கும்; சித்த சுத்தியுண்டாம். இந்த மூன்று விரதங்களும் ஒன்றுக்கொன்றுதாரமா யிருந்துதவும். இம்மூன்று மூலக்கொள்கைகளையும் நன்றாகவுணர்ந் தனுஷ்டிக்கப் பழகினவன் வித்யாதர்மங்களை யறிந்தவனுவான். மற்ற விவரங்களெல்லாம் இந்த மூன்று தர்மங்களை யனுஷ்டிப்பதிலடங்கிவிடும். இந்த மூன்றுந்தான் இகபரமிரண்டிற்கும் ஜீவாதாரமான மூலக்கொள்கைகள். மஹாபாரதத்தில்விளங்கும்வித்தியா

தர்ம முறையை ஆராயினும் சரி, புத்தர் பகவான் போதித்த வித்யாமுறையை ஆராயினும் சரி, அவையெல்லாம் இம்மூன்று மூலக்கொள்கைகளையே வற்புறுத்திக்கூறும். இதையுணராமல் நமது சென்னை பிஷப்பவர்கள் பூர்வீகபோதனை முறையை யிகழ்ந்து இக்காலத்துப்பூத பௌதிகசாஸ்திர விஷய ஞானங்கள் பூர்வீக முறைகளில் காணப்படாததைப் பற்றிக் குறைகூறிச் செப்பியுளார். மூலக்கொள்கையைப் பிடித்துச் செல்லுகையில் விஷய விவரங்களை நுழைத்துஇரண்டையும் ஒப்பிட்டுப்பார்ப்பது உண்மை விளங்குவதற்குச் சாதகமாகாது. ஆகையால் பிரதமாதாரமான கொள்கைகளை. (underlying principles) யெடுத்தாராயுங்கால் விஷய விர்த்தி ஞானங்களை யெல்லாம் அக்கொள்கையிலடக்கிப் பார்க்க வேண்டும். யேசுகிறிஸ்துவானவர் "Love is the fulfilment of all laws" "அன்பிலமர்ந்துறைய எல்லாதர்மங்களும் நிறைவெய்தும்" என்றதனால் அதற்கு முன்னுள்ள தர்மங்களையெல்லாம் நிராகரித்ததாகச் சொல்லலாமா! அப்படியல்ல. ஞான திர்ஷ்டியுள்ளவர்கள் எதையும் தீரவாராய்ந்து, ஆணிவேர் மட்டுமாழவறிந்து பேசுவார்கள். மரத்திற் காதாரமான வேர் மண்ணுள் மறைந்திருக்கிறதென்பதை யுணராதவர்கள் அவர்கள் கருத்தை யுணர்வது கஷ்டந்தான். அதனால் ஞானிகள் வாக்காவது அவர்கள் வாக்காலுரை செய்த உண்மையாவது பொய்யாகாது: காரியத்திலும் உண்மை அவர்கள் சொன்னதற்கு வேறுபட்டிராது.

ஓம் சத்குருவே நம:
ஓம் தத்ஸத்.

SOME LATEST DISCOVERIES OF SCIENCE.

I. THE RESPONSE OF MATTER.

## சடத்திற் சீவன்.

இவ்வுலகிலுள்ள பொருள்களையெல்லாம் பொதுப்பட நோக்கி இரண்டாகப் பிரித்துரைப்பர். அதாவது தாவரப்பொருள், சங்கமப்பொருள்; தாவரம்—அசைவற்றது; சங்கமம் அசைவுள்ளது. இதை ஓரிடத்து நிலையாயுள்ள பொருளென்றும், நிலைபெயரத்தக்க பொருளென்றும் புறப்பொருளர்த்தத்தில் பூமியோடொப்பிட்டுக் கூறுவர். அப்படிக்கின்றி இவைகளைப் பிரத்தியேகமாக அவ்வப்பொருள் மட்டில் கவனித்துப் பார்க்கின், அசையும் பொருள் உயிருள்ள பொருளென்றும், அசையாப் பொருள் உயிரற்ற பொருளென்றும் சொல்வர். உயிருள்ள பொருளை சீவன் என்றும், உயிரற்றதை சடமென்றும் சொல்வர். உயிருள்ள பொருள் அசையுந்தன்மையும் வளருந்தன்மையும் வாய்ந்துள்ளது. உயிரற்ற பொருளுக்கு இவையிரண்டுமில்லை. இதையே மேற்றிசைப் பூதபௌதிக சாஸ்திரிகள் organic substance, inorganic substance என்று சொல்லி வகுத்துக் கூறுவர். மேற்றிசையார் பகிர்முக விசாரணையே செய்து உண்மையைக் காண முயல்கிறார்கள். அந்தர்முகமாக விசாரணை செய்து உண்மையுணரும் சக்தி அவர்களுக்கு அவ்வளவாக இல்லை. அந்த வழியாகக் கண்ட உண்மைகளில் அவர்களுக்கு நம்பிக்கையுமில்லை. கருவிகரணங்களால் காணக்கூடிய தெதுவோ அதையே அவர்கள் நம்புவார்கள். ஆனால் நமதுபஞ்சேந்

திரியங்களின் கிரகிக்கும் சக்தி மிகவும் வரையறுக்கப்பட்டுள்ளதாததால் அவைகளை நம்பியவர்களுக்கு அவ்வெல்லையை மீறிப்போவது மிகவும் கஷ்டமென்பதை நோக்காது, மனிதனால் அறியக்கூடியதெல்லாம் அவன் புலன் பொறி யறிவுக்கெட்டிய அளவேயென்று, ஸர்வக்ஞ சக்தி வாய்ந்த ஆத்மாவைத் தள்ளி, கிஞ்சிக்ஞத்துவனை சீவனையே பெரிதும் பாராட்டிவந்தார்கள். ஆனால் சத்தியம் எப்படியும் சத்தியமேயாதலால், மனிதன் அதை யுணர்ந்தாலும் உணராவிட்டாலும், அது ஏதோ உள்ளது உள்ளபடியே இருந்துவருகிறது. மனிதனும் உண்மையில் ஸர்வக்ஞத்துவம் வாய்ந்தவனாதலால் உண்மையை உள்ளபடி உணர அவனுள்ளத்தில் அவனால் அடக்கக்கூடாத ஆசையொன்றிருந்து அவனைத் தூண்டிக் கொண்டேயிருக்கிறது. இந்தத் தூண்டுதலிற்குட்பட்ட மனிதன் எப்போதும் தன் புலனிற் படுங் காரியங்களுக்குக் காரணம் என்னவென விசாரித்துக்கொண்டே யிருக்கிறான். இப்படி ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் என்னவென்று விசாரிக்க, விசாரிக்க, காரணம் காரியமாக மாறி, காரணத்துக்குக் காரணம், அதற்கும் காரணம், என்று படிப் படியாய் ஏறி ஆதிகாரணத்தை அறியும் வழியில் அவன் அறியாமலே செல்லுகிறான். காரணமின்றிக் காரியமில்லை. காரியமுண்டானால் அதற்குக் காரணமுண்டு. *காரணத்திற்கும் காரியத்திற்குமுள்ள சம்பந்தமே சத்தியமார்க்கமாம். இது படிப்படியாக ஏறி எல்லாக் காரணங்களுக்கும் காரணமாயும் அதற்குமேல் காரணமின்றி தானே தானாய் விளங்கும் வஸ்து ஒன்று எது உண்டோ அதில் போய் முடியும்; அதுவே பூர்ண சத்தியமாம்; பிரம்மம் என்பதும் அதையே. சமயவழி பற்றிச் செல்வோர் **தெய்வம்** என்றும் **கடவுள்** என்றும் சொல்வர் இதையே.

இப்படி இப்பிரபஞ்சத்தில் தோற்றும் தோற்றங்களுக் கெல்லாம் காரணம் விசாரித்துக் கொண்டுபோனால் அது ஆதிகாரணனாகிய கடவுளின் பாதார விந்தத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கும். இதைத் தத்துவ விசாரமென்பர். தத்துவம்—நூலில் கோர்த்த பவழம்போல காரண காரியக்களைக் கோர்வையாக விளங்கச் செய்யும் உண்மை. இதை விதி யென்பர்; மேற்றிசைப் பாஷைகளில் இதை "the Law" என்பர். மேற்றிசைத் தத்துவசாஸ்திரிகள் பேதபுத்தி கொண்டு எதையும் வேறுபடுத்தி யாராய்ந்து வந்ததால் உண்மையையுள்ளபடி யுணராமல் வேற்றுமையாகவுணர்ந்து தப்புவழியிற் சென்றார்கள். அவர்களும் இப்பொழுது தாங்கள் செய்த தப்புகளை யெல்லாம் திருத்திக்கொண்டு உண்மையான வழிக்குத் திரும்புகிறார்கள். முதலில், சக்தி வேறு, உஷ்ணம் வேறு, மின்சாரம்வேறு என்று தீர்மானித்திருந்தவர்கள் இப்பொழுது அவையெல்லாம் ஒன்றேயென்று கண்டுணர்ந்து அதைக்காரியத்திலு முபயோகப்படுத்தி வருகிறார்கள். அசைவற்ற நீர் நிலையில் ஒரு கல்விழுந்தால் அசைவுண்டாகி அலைகள் தோன்றுவது போல் சிதாகாசத்தில் (Subtle Ether) உண்டாகும் கண்ணுக்குப் புலப்படாத மின்னொளி அலைகளால் ஒளி, சப்தம், அசைவு முதலிய உண்டாகின்றன வென்றும், உஷ்ணம், சக்தி, மின்சாரம்

---

*Cf. Emerson who says "We are natural believers. Truth or the connection between cause and effect alone interests us." "We hearken to the man of science because, we anticipate the sequence in Natural phenomena which he uncovers."

இவையெல்லாம் அவ் அலைகளின் வேகத்தினுடைய வேற்றுமையாலுண்டாகும் தோற்றங்களேயன்றி வேறல்லவென்றும் கண்டறிந்துகொண்டிருக்கிறார்கள். இந்த சிதாகாச அலைகளின் உண்மையை உணரக் காரணமாயிருந்தவர் ஜர்மனியிலுள்ள (Hertz) ஹெர்ட்ஸ் என்னும் சாஸ்திர நிபுணர், இவர்தான் (eletric waves) மின்சார அலைகளிருப்பதைக் கண்டுபிடித்து, அவை கண்களுக்குப் புலப்படாவிட்டாலும், அவைகளுக் கேற்ற சூக்ஷ்ம யந்திரங்களால் அவைகளின் உண்மையை நிரூபிக்கலாமென்று கண்டு அப்படியே நிரூபித்தும் காட்டியர். இங்கிலாந்தில் இந்த உண்மையைக் கண்டுபிடித்தவர் ஸர் ஆலிவர் லாட்ஜ் என்னும் பௌதிக சாஸ்திர விற்பன்னர். இந்த உண்மையின் ஆதாரத்தைக் கொண்டே இப்பொழுது தந்திக் கம்பியின்றி மின் சமாசாரம் அனுப்பும் சூஷ்மம் (wireless telegraphy) கண்டு பிடிக்கப்பட்டு (Marconi) என்பவரால் அநுஷ்டானத்திற் கொண்டு வரப்பட்டிருக்கிறது.

உலகத்திலுள்ள பௌதிகப் பொருள்களை யெல்லாம் அணுமாத்திரமாக மாற்றலாம் (molecule); அப்புறம் அவைகளை அதிலும் சூக்ஷ்மப் பொருளாக் மாற்ற முடியாமையால் இந்தப் பிரபஞ்சமெல்லாம் அணுமாத்திரமானதேயென்று (Atomic theory) ஒரு கொள்கை ஏற்பட்டிருந்தது. இப்பொழுது மின்சார சக்தியால் அணுவையும் பிரித்தால் அது சுற்றிச் சுழலும் ஒரு சக்தியாக மாறுகிறதென்று ப்ரோபெஸர் க்ரூக்ஸ் என்னும் தற்கால பிரபல சாஸ்திர விற்பன்னர் நிரூபிக்க, அதுவும் தப்பென்று தீர்ந்தொழிந்தது. நிகோலா, டெஸ்லா (Nicola Tesla) என்னும் அமெரிக்காவிலுள்ள மின்சாரதத்துவ சாஸ்திரி, இந்தப் பிரபஞ்ச மெல்லாம் பம்பரம்போல் சுற்றிச் சுழன்று வரும் சுழற்சி சக்தியினாலுண்டாயிருக்கிறதென்றும், அந்தச் சுழற்சியைமுற்றும்நிறுத்தினால், பிரபஞ்சப் பொருளெல்லா மழிந்து அறிவுக்கெட்டாதசத்திய நித்தியப் பொருளாக மாறிவிடுமென்றும், இந்தச் சுழற்சிவன்மையாலே ஆகாசத்திலிருந்து எல்லாப் பொருளையும் சிஷ்டிக்கலாமென்று நிச்சயமாய் ஊகித்துணரக் கூடியதாயிருக்கிறதென்றும், இதைச் செய்யும் வகை இன்னும் தெரியாமையால் இது பொய்யென்று சொல்வதற்கில்லை யென்றும், பூர்வத்தில் தீர்க்கதரிசிகள் கண்டுள்ளதாக வேதங்களில் காணும் தத்துவக் கொள்கைகள் உண்மையே யென்று அவர் உணர்வதாகவும் சொல்லியிருக்கிறார். வித்தில் மரம்போல், மனிதனுக்குள் தெய்வம் ஒடுங்கியிருக்கிறதென்று தற்கால சாஸ்திர வழியே சாதித்துக் கூறியெழுதி யிருக்கிறார். "Man is potential God" என்றார் இவர்.

இப்பொழுது கல்கத்தா ப்ரெஸிடென்ஸி காலேஜில் பூத தத்துவ சாஸ்திரத்தில் ப்ரொபஸராக அமர்ந்துள்ள ஜகதீச சந்திர போஸ் என்பவர் நூதனமாய்க் கண்டுபிடித்து நிரூபித்துள்ள ஒரு உண்மையால், இதுவரையில் சட பதார்த்தமென்று (Dead matter) சொல்லி வந்த லோகங்கள், மனிதன், மிருகம், செடிகளைப்போலவே சீவசக்தி வாய்ந்ததென்றேற்பட்டு ருசுவாய்விட்டது. இதனால் இன்னொருதப்புத் திருத்தப்படலாயிற்று. இவர் உலோகங்கள் மனிதனைப்போலவே சீவசக்தி வாய்ந்தவையென்று ஸ்தாபித்த முறை மிகவும் அதிசயிக்கத்தக்கது. சீவனென்றாலென்ன? உயிருள்ளது என்பார்கள். உயிர் இருப்பதற்குஅடையாளமென்ன? தானாக அசையும் சக்தியுள்ளது. ஒரு புழுவைக் கண்டு அதில் சீவனிருக்கிறதா இல்லையாவென்று பார்க்க நாமென்ன செய்கிறோம்? ஒரு குர்சியைக்கொண்டு

அதைத் தூண்டுகிறோம். அது நெளிந்தால், அதாவது அசைந்தால், உயிரிருக்கிறதென்கிறோம். இல்லையேல் செத்துவிட்டது என்கிறோம். இதிலிருந்து நாம் அறியத்தக்கதென்ன? வெளியிலிருந்து வரும் தூண்டுதலுக்கு மாறுத்தரமாக அதனுள்ளிருந்து அசைவுண்டானால் அது உயிரிருப்பதற்கடையாளம். இத்தூண்டுதலையும், இதற்கு மாறுத்தரமாக உள்ளிருந்துண்டாகும் அசைவையும் எவ்வளவு அதிசூக்ஷ்மமாக விருக்கினும், கண்டுபிடிக்கும் அதிநுட்பமான கருவி ஒன்று வேண்டும். நமது கண்கள், காதுகள் ஆகாசத்தில் உண்டாகும் அலைகளினசைவை ஏதோ ஒரு அளவுக்குள்பட்டவரையில்தான் உணரக்கூடும். அந்த அளவுக்குக் குறைந்தாலும் அதிகப்பட்டாலும் காணச் சக்தியில்லை. ஆகவே அதிநுட்பமாக வுண்டாகும் அசைவுகளைத் தவறாது குறித்துக்காட்டும் சூக்ஷ்ம யந்திரமொன்று (Galvanometer) புதிதாய் நிருமித்து அதிலுள்ள குறைகள் நீங்க அக்கருவியைப் பூரணப்படுத்திவருகையில் மிஸ்டர் போஸ் இப்புதுமையைக் கண்டார். இந்த (Galvanometer) என்னும் மின் அலையசைவு குறிக்கும் யந்திரம் எவ்வளவு நுட்பமான அசைவையும் அதனூடே செல்லும் ஒரு காகிதத்தில் விரிவு சுருங்கலுக் கேற்பக் கோடு கிழித்துக்காட்டும். அசைவுள்ளவரையில் கோடு மேலும் கீழுமாக அசைந்து செல்லும். அசைவற்றால் கோணலுமற்று நேராக வோடும். இந்த யந்திரத்தை மனிதனுடைய மாம்ச நரம்பில் (muscle) பிணைத்து மின்சார அதிர்ச்சியால் அத்தசை நரம்பைத்தூண்ட அத்தூண்டுதலுக்கு மாறுத்தரமாக அம்மாம்ச நரம்பு சுருங்கி விரிவது அதிலுள்ள சீவசக்திக்குத் தக்கபடி ஏற்றலும் குறைச்சலுமாக அவ்யந்திரத்தினூடே செல்லும் காகிதத்தில் கோடுகளின் ஏற்ற இரக்க விசேஷத்தால் விளங்கும். அந்நரம்பு அலுத்துக் களைத்துப் போனால் அதற்குத் தக்கபடி கோடுகளும் வித்தியாசப்பட்டுக் காட்டும்; அந்நரம்பிலுயிரற்றுப் போய் அது செத்துப்போனால் அப்பொழுது கோடு அசைவற்றுக் காணப்படும். இந்த அதியற்புத யந்திரத்தை ஒரு உலோகத்துண்டுடன் சேர்த்து, அந்த உலோகத் துண்டை மின்சார அதிர்ச்சியால் தூண்ட, அது காரணமாக அந்த உலோகத்திலிருந்துண்டான இயக்கத்தால் காகிதத்தில் விழுந்த கோட்டுக் குறிகளை யெடுத்து மாம்ச நரம்பின் இயக்கத்தாலுண்டான கோட்டுக் குறிகளோடு ஒத்துப் பார்க்க இரண்டும் சிறிதும் வித்தியாசமின்றிப் பொருந்தியிருக்கக் கண்டார். இதைக் கண்டு அதிசயத்து, உயிருள்ளவரையில் சாவுமுண்டாதலால், அந்தப் பரீக்ஷைக்கு ஒத்து வருகிறதாவென்று பார்க்கத்தீர்மானித்தார். மாம்சநரம்பும், சீவ சக்தியுள்ளவர்க்கத்தைச் சேர்ந்த செடி கொடிகளும், விஷத்தினால் செத்துப்போய் வெளித் தூண்டுதலுக்குத் தக்கபடி உள்ளிருந்து வரும் அசைவற்றுப் போவதால், உலோகங்களின் செய்தி எப்படியென்றறிய, அந்த உலோகத்துண்டை விஷத்திராவகத்திலழுத்தி, கால்வானோமிடர், என்னும் அவர் யந்திரத்தில் சேர்த்து, மின்சார அதிர்ச்சியால் அவ்வுலோகத்துண்டைத் தூண்டினார். அப்பொழுது அது செத்துப்போன மாம்சநரம்புபோலவே அசைவற்றிருக்கக் காணப்பட்டது. அந்த விஷத்தைத் தீர்க்க வேறு திராவகம் விட்டு அப்பொழுது பார்த்தார். முன்போல் உயிர் பெற்றுள்ளதென அசைவுகாட்டியது. இப்படி உயிர்ப்பிராணியின் ஒரு மாம்ச நரம்பைப் போலவே களைப்பு, இளைப்பு, சாவு, உயிர்ப்பு எல்லாம் காட்டிய உலோகத்தில் சீவ சக்தியில்லையென்று இனி என்னமாய்ச் சொல்கிறது. இந்த அதிசயத்தைப் பார்த்த ஐரோப்பிய சாஸ்திர விற்பன்னர்களெல்லாரும்,

இதுகாறும் சிவவர்க்க மென்று கருதிவந்த பொருள்களிலுள்ள சிவனே, சடவர்க்கமென்றி கருதப்பட்ட உலோகங்களிலுமிருப்பது ஸ்பஷ்டமாய் ஏற்படுவதால் அவைகளைச் சடப் பொருள் என்று சொல்வது இனித்தகாது என்று ஒப்புக்கொண்டு, இன்னும் என்ன என்ன அதிசயங்கள் வெளியாக விருக்கின்றனவோ வென்று ஆச்சரியப் பட்டார்கள். இந்த உண் மையை முதல் முதலறிந்த மிஸ்டர் ஜகதீச சந்திர போஸ் அவர்கள் இதைக்கண்டு அட ங்கா அதிசயப்பட்டு ஆச்சரியத்தில் மூழ்கிச் சிந்தையிலாழ்ந்து புத்தி தெளியவும் 'கங்கைக் கரையிலுள்ள நம்முன்னோர்கள், "இப்பிரபஞ்சத்தில் தோற்றும் எண்ணிலாத் தோற்றங்களி லும் ஏகமாயுள்ள தொன்றையே எவன் காண்கிறனோ அவனே நித்தியமாயுள்ள சத்தியத்திற் குப் பாத்திரன், வேறெவர்க்கும் அது விளங்காது, விளங்காது," என்று உபநிஷத்திற் கூறியுள் ளதினுண்மை இத்தன்மைத்தாயிருக்கு மென்று அப்பொழுது தான் எனக்குச் சிறிதுபட் டது' என்று வெகு அழகாகச் சொல்லியிருக்கிறர்.

இப்படி இக்காலத்துச் சாஸ்திர ஆராய்ச்சிசெய்பவரும் துணிந்து மேற்போகப் போக பூர்வத்தில் திர்க்கதரிசிகள் கண்டவுண்மைகளையே சிறிது சிறிதாக உணர்ந்து வருகிறர்கள். எத்தனையோ நூற்றுண்டுகளாக உழைத்து எவ்வளவோ தப்புகள் தவறுகள் செய்து தட்டுத் தடவித் தடுமாறிக் கடைசியாக தற்செயலாய்க் கண்டுபிடித்த இந்த உண்மையை, நமது ரிஷி கள், அவர்கள் மனதை பகிர்முகப் பார்வையினின்று அந்தர்முகமாகத்திருப்பித் தத்துவாரா ய்ச்சி செய்ததால் வெகுசுலுவில் பிரத்தியட்சமாக அறிந்து சாக்ஷாத்காரமாகப் போதித்த னர். இக்காலத்துத் தத்துவ ஆராய்ச்சி செய்யும் சாஸ்திரிகளுடைய யந்திர தந்திர உபாயங்க ளெல்லாம் அவர்கள் தேடுவதில்லை. பகிர் முகமாகப் பரீக்ஷை செய்துண்மையை யூகித்தறியும் இவர்கள் பிடிகை வேறு, அவர்கள் பிடிகை வேறு. மிஸ்டர் போஸ் அதியாடம்பர ஆர்ப்பாடங் களோடு உலகெலாம் கண்டதிசயிக்க ஓதிய இவ்வுண்மையை அடுத்த தலைமுறையில் பிறக்கும் குழந்தைகள் அவர்கள் தாய்மடியிலிருந்து தாங்கள் பேசும் மழலைச் சொல்லோடு கற்றுக் கொ ள்வார்போல், ஞானிகள், குழந்தைகளாகிக் கடவுள் மடியில் தவிழ்ந்து விளையாடிக் கொண்டி ருக்கும் சக்தியால் இவ்வுண்மைகளை யெல்லாம் ஸ்வானுபவத்திற் கண்டு சாதாரணமாக உரைப் பார்கள். உதாரணமாக ஸ்ரீ மாணிக்கவாசகர் பிரபஞ் சோற்பத்தியாம், "சிவபுராணத்தைச்" சொல்லப்புகுமுன் அவர் முகவுரையாகக் கூறியுள்ள வார்த்தையைக் கேளுங்கள். அவருடைய யந்திர தந்திர சாதகங்களெல்லாம் ஈசன் திருவருளே யன்றி வேறில்லை.

"சிவனவனென் சிந்தையுள் நின்றவதனல்
அவனருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தைமகிழச் சிவபுராணந் தன்னை
முந்தைவினை முழுதுமோய உரைப்பனியான்"

இம்முகவுரைக்குப் பின் இப்பொழுது பிரமாதமாகக் கொண்டாடப்படும் இதே உண் மையைக் குழவியின் மழலை வார்த்தை போலுங் காதுக்கினிய அதிமதுர வார்த்தைகளால் ஸ்வானுபவத்திலிருந்து அவர் பிறப்புகள் வரலாற்றை யுரைசெய்யக் கேளுங்கள் :—

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
* பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய்மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாநின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்!"

இவ்வுண்மையைக் கண்டு அவர் வியந்திலர், உவந்திலர், உலகெலாஞ் செப்ப ஓடிலர். பின்னை! இதையெல்லாந்தள்ளி, இதிலும் மேலாய் என்று மழியாததாயுள்ள மெய்ஞ்ஞான ஸ்வரூபமாகிய கடவுளைக்காண ஆசைப்பட்டு "மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!" "எஞ்ஞான மில்லாதேன்" அஞ்ஞானந்தன்னை அகல்விக்கவேண்டி, "உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற" மெய்யனைப் புகழ்ந்து வணங்கி அவரை ஞானகுருவாகப் பெற்றுத் தான் கடைத்தேறியதை **"மெய்யே, உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"** என்று வாய்விட்டுச் சொல்லி சத்தியமுடிவெய்திச் சாந்தமெய்தியதையே பெரிதாகக் கருதிப் புகழலானர். இதுவல்லவா எல்லா அறிவுக்கும் அந்தமாம் **வேதாந்தம்.** எல்லா சாஸ்திரங்களும் வந்து முடியுமிடம் இதுவே. இதையடையும்வரையில் எவரும் இடையில் தங்கி நிரந்தர நிச்சயம் பாராட்டி நிற்றல் கூடாது என்பதை வற்புறுத்தவே கதோபநிஷத்தில் குரு சிஷ்யனைப்பார்த்து உள்ளக்கண்ணைத் திறந்துபார்க்கச்சொல்லி, "அப்பா அந்தம் சேரும் வரையில் இடையில் நில்லாதே, நில்லாதே!" யென்று வற்புறுத்திக் கூறுகிறார். ஓம் தத்ஸத்.

C. V. S.

---

# The Gospel of the Holy Mother.

## As presented by Her to Her Blessed Child and Son.

*On the Day of the Cleansing of the Spirit, 00.*
*(With the First Dawn of the 20th Century)*

# ஆனந்தத்தாய்மொழி.

### 6-வது: கூடல் பருவம்——ஊடல் படலம்.

"போகப்போகவா," போவேன்கடுகவென்று,
கடுகவழிநடந்தேன் கரைதுறைகள்கடந்துவிட்டேன்
கடந்துவிட்டபின்புநான் கண்டதையென்சொல்வேன்
விடியற்காலையிலே வெளிச்சம்வரும்வேளையிலே
ஊனஉடல்தான் உள்மலம்கழித்திடவே

---

* பல விருக்ஷங்களாகி,

[54]அண்டம் பிளந்ததுகாண் அடிவானம்வெளுத்ததுகாண்
வெளுத்த அடிவானத்தில்விண்மீனுதித்ததுகாண்
உதித்த அந்தவிண்மீனும்பொன்மயமாயிருந்ததுவே:
பொன்மயமான துவைப் பிடித்துவிடநான்பார்த்தேன்
பார்த்தும்பலிக்கவில்லை பரதேசியானேன்நான்
பாதேசியானபின்பு பார்த்துக்கொண்டேன் ஆராய்ந்து;
ஆராய்ந்துபார்க்கையிலே அம்மாள்கையைக்கண்டேனையா
கையதனைக்கண்டுவிட்டேன் கஷ்டமதுமிகவாச்சு
அபராதம்செய்தேனென்று அன்புருகிநொந்தேனையா
தாழவேகையைவைத்தென்னைத் தாலாட்டிவந்ததாயார்
கையெடுத்துமேலாகக் காட்டினதைக்கண்டுவிட்டேன்
கண்டிடவேதானுமெத்தக் கருத்தழிந்துஉருகியது
கருத்தழிந்துபோகவுந்தான் கண்டேன்செய்குற்றத்தை
"காண்டாமிருகமதனை நான்கசக்கிப்பிழிந்தே"னென்று
அகங்காரவாடை யடித்ததையாஎன்மேலே;
அந்தவாடையதுமெய்ப்புறுமல் தடுக்கவந்தாளென்தாயார்;
வாடையைத்தடுத்துஅவள் முகவாட்டமாயிருந்தாள்.

ஃ

இன்னுமென்னகுற்றமென்று ஆராய்ந்தேன்மிகநணிவாய்:
காண்டாமிருகமதனைக் கசக்கிப்பிழிந்ததனால்
அழித்தழித்துட்பிழிந்து அம்மணியாயாக்கிவைத்தேன்;
அந்தமட்டுநான்தானு முண்மையாகவேயிருந்தும்
ஆத்திரப்பட்டுநான் அமுதமளிக்கப்போனேன்:
அதிகப்பிரசங்கியவன், அவன்கெட்டான்போவென்று
அம்மாள்வந்தம்மணியை யழைத்துக்கொண்டுபோய்விட்டாள்:
அந்தஉளவறியாமல் அகப்பாவக்கழுதையது
"காண்டாமிருகவாசனை" யென்றுகத்திற்றுவாய்விட்டு;
இத்தனைநாள்தவமிருந்து எத்தனையோபடியேறி
கழுதையதாவானேனே கனகுற்றம்செய்ததனால்!
கனகுற்றம்செய்தாலும் கண்டறிந்துசெய்தேனோ ?

---

54. "வெளுத்தஅடிவானத்தில்விண்மீனுதித்ததுகாண்." c. f.

என்னையறியவிசைவித்தவென்னந்தி
யென்னையறிந்தறியாதவிடத்துய்த்துப்
பின்னையொளியிற்சொருகிப்புறப்பட்டுத்
தன்னையளித்தான்தற்பரமாகவே.

கடுகிவழிநடந்ததனல் கலைமீறிச்செய்தேனம்மா
அறியாக்குழந்தைநான் தெரியாமற்செய்ததுவை
அன்பேநீதாயாரே ஆரமுதேசகியுமம்மா:
மடியில்வளர்த்தென்னைத் தரையில்விட்டுப்பார்த்தனையே!
தரையில்விட்டேபார்த்தாலும் தயவுகுறையவில்லை;
தயவுமிகவிருந்தாக்கால் தப்பிநான்பிழைத்திடுவேன்;
ஆத்திரக்காரனம்மா என்னையடக்கியேயாளும்மா
அடக்கிநீராண்டாக்கால் ஆகாதோ அம்மாவே!

ஃ

55 அம்மா அம்மாவென்றழுகிறேன் ஓலமிட்டு
ஓலமிட்டழுதுமின்னம் கண்திறக்கவில்லையே
கண்திறக்கமாட்டீரோ கதிதானெனக்கிலையோ!
ஏறியிறங்கினதாய் ஒதிஞர்யாரோகாண்:
உன்வயிற்றிற்பிறந்தும் நான்ஏறியிறங்குவனே!
ஏறியிறங்கவிட்டால் ஏச்சுப்பேச்சாகாதோ!
ஏச்சென்றும்பேச்சென்றும் பிதற்றுகிறேன்பாரம்மா:
ஏச்சுப்பேச்சழிந்து எத்தனைகாலமாச்சு!
இறக்கமதுகண்டதனலிவ்வார்த்தைநானுரைத்தேன்.
ஏற்றியிறக்கி இளைக்காரம்காண்பாயோ!
கடுகவழிநடந்தேனென்று கண்தோஷம்பட்டதென்று
கழுதையேதானுக்கி கண்திர்ஷ்டிகழித்தனைகாண்.
என்னஎன்னசூக்ஷ்மமடி என்தாயேஉன்றனக்கு!

ஃ

உன்சூக்ஷ்மமறிந்தல்லோ பிழைத்திடவேணும்நான்:
ஆத்திரக்காரனென்று அனுபவந்தான்முதிரவிட்டாய்;
காண்டாமிருகமதனைக் கசக்கிப்பிழியென்றாய்;
இட்டவேலைதட்டாது செய்திட்டகாலையிலே
தெரியாதுசெய்தபிழைக் கென்னைக்கழுதையாயாக்கிவிட்டாய்.

55. "அம்மாஅம்மாவென்றழுகிறேனஓலமிட்டு." c. f.

சீர்நந்திகொண்டுதிருமுகமாய்விட்ட
பேர்நந்தியென்னும்பிறங்குசடையனை
நானொந்துநொந்துவருமளவுஞ்சொல்லப்
பேர்நந்தியென்னும்பிதற்றொழியேனே.

ஆத்திரம்நீங்கிற்றம்மா அவசரமும்தொலைந்ததம்மா.
போதும்போதுமிந்தப் பொய்க்கூத்தாடினது !
மெய்வழியேசெல்வேன் விட்டவிடம்தானேறுவேன்;
விட்டவிடந்தானேறி வேணமட்டும்காத்திருப்பேன்:
அவசரப்பட்டு ஆவதொன்றுமில்லையே !
அவசரக்காரனென்று என்னையழுங்கழுதையாக்கினையே:
கழுதையின்பொறுமைதான் இனிஎன்னைவிட்டுப்பிரிந்திடுமோ !
பொறுமையதுவந்ததம்மா, போயிற்றுக்கழுதைஜன்மம்:
கழுதைஜன்மம்போயிற்றுக் கிடைத்ததுவேமுன்கதிதான்.

ஃ

அம்மாள்அருளாலே அழைக்கிறாள்குழந்தைவந்து
அமுதுண்ண அன்பாக அழைக்கிறாள்குழந்தையவள் ;
அழைக்கிறகுழந்தையை அரைநிமிஷம்காக்கவைத்தேன்:
காக்கவைத்ததேனென்றால் கழுதையின்பொறுமையினால்,
கண்ணாரக்கண்டிருந்து காதாரக்கேட்டவர்கள்
உண்மையைச்சொன்னேனென்று உள்மகிழ்ந்துமெய்ம்மறப்பர்.

ஓம்தத்ஸத்.

---

## THE ILIAD OF HOMER.

### ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

### அக்கிலவனுக்கும் அகமம்னனுக்கும் பிணக்கம்.

**இக்காண்டத்தின் கதாசங்கிரகம்.**

தராய் உயுத்தத்தில் கிரேக்கர்கள் சமீபத்திலுள்ள சில நகரங்களைக் கொள்ளையிட்டு அவற்றினின்று கிரிசை, பிரிசை (Chryseis and Briseis) என்று அதிரூபவதிகளாகிய இரண்டு பெண்களைச் சிறைப்பிடித்தார்கள், அவர்களில் முன்னவள் அகமம்னனுக்கும் பின்னவள் அக்கிலனுக்கும் உரியராயினர். கிரிசையின் தந்தையாகிய கிரிசன் என்பவன் அவளை மீட்கும்பொருட்டு கிரேக்கர் படையிறங்கிய தானத்தில் வந்து அகமம்னனை வேண்டிக்கொள்ள, அவன் அவனை அவமதித்துத் துரத்திவிட்டான். அக்கிரிசன் மிகவும் விசனமடைந்து தனது இஷ்ட தேவதையாகிய கதிர்க்கடவுளிடம் முறையிட அக்கடவுள் கிரேக்கர் படைக்குள் ஓர்

கொடிய வெப்பு நோயைப் பரவச்செய்தான், அப்போது அக்கிலன் அதற்கோர் நிவர்த்தியை ஆலோசிக்க ஓர் சபை கூட்டி அச்சபையில், கால்கன் (Chalcas) என்னும் ஆரூடக்காரனால் அந்நோய்க்குக் காரணம் கிரிசை யென்னும் மடந்தையை விடாமையே யென்று உணர்த்துவித்தான். அதனால் அரசனாகிய அகமம்னனுக்கு அப்பெண்ணை அனுப்பிவிடவேண்டிவந்ததனால் அக்கிலனோடு மகா மூர்க்கமாகச் சச்சரவிட்டுப் பின்பு நெத்தர் (Nestor) என்பவனால் சாந்தமாயினான். ஆயினும் தான் சைனியத்தில் சர்வாதிகாரம் பெற்றிருந்ததனால் தானிழந்த நங்கைக்கு மாறாக பிரிசை யென்பவளை பலாத்காரமாகக் கவர்ந்துகொண்டான். அதனால் அக்கிலன் அதிருப்தியடைந்து தானும் தன் படையுமாக மற்ற கிரேக்கர்களை விட்டு விலகிப்போய் தன் தாயாகிய தேதி (Thetis) என்பவளோடு முறையிட அவள் தராயர்களுக்கு ஜயத்தை யளித்து அதனால் தன் மகனுக்குத் தாங்கள் செய்த அநீதத்தின்பயனைக் கிரேக்கரை உணரச் செய்யவேண்டுமென்று யூபிதர் என்னும் கடவுளை வேண்டிக்கொண்டாள். யூபிதர் அவ்வேண்டுகோளுக் கிணங்கலாலே யூனோவென்னும் தன் தேவிக்குக் கோபமூட்டினான். அதனால் அவர்களிருவருக்கும் கொடிய சச்சரவுண்டாகிக் கடைசியில் வல்கன் என்பவனால் சமாதானப் படுத்தப் பட்டார்கள்.

1. இலத்தனா மைந்தனான விரவிமா வெகுளிபூண்டு
குலைத்திடுங் கொடிய நோயாற் குவித்தனன் பிணத்தின் குன்றால்
நலத்தகு வீரர்தங்கு மிடனெலா நராதிபன்றான்
நிலைத்த தன் னன்பன்றன்னை நிந்தை செய்ததனான்மன்னோ.

(இ-ள்.) இலத்தனாவின் (Latona) புத்திரனாகிய கதிர்க்கடவுள் அரசன் தன்னுடைய மாறா நேயம்பெற்ற அன்பனாகிய கிரிசனை (Chryses) அவமதித்துச் செய்த குற்றத்தாலே மகா கோபம் கொண்டு கிரேக்க வீரர் தங்கியிருந்த விடங்களிலெல்லாம் ஓர் கொடியவெப்பு நோயைஉண்டுபண்ணி அவர்களைக் கணக்கில்லாமல் மாளச்செய்து பிணங்களைக் குன்று குன்றாகக் குவியச்செய்தான்.

2. என்னெனி லிரவிக்கான்ற வன்பனாம் கிரிசனென்பான்
தன்னருந் தோகை தன்னைச் சிறையினிற் றவிர்க்கவெண்ணிப்
பொன்னொடு பொருள்கள் யாவும் பொருவறக் கொணர்ந்து க்ரேக்கர்
துன்னு பேரவையிற் போந்து துனியொடு மிரந்து நின்றான்.

(இ-ள்.) அவ்விவரம் யாதென்னில் சொல்லுவேன் கேட்பீராக. கதிர்க்கடவுளுக்கு மிக்க அன்பனாகிய கிரிசன் என்பவன் தன்னுடைய புத்திரியைக் கிரேக்கராஜன் சிறைப்பிடித்து வைத்தவினாலே அவளை மீட்கும்பொருட்டு அநேக திரவியங்களோடு இராஜ சபையில் வந்து நின்று சொல்லானாயினான்.

3. கரத்துறு தண்டுந்தூய கானமர் தொடையு நீட்டிப்
பெருத்த வவ்வவையத் துள்ளார் யாரையும் வேண்டிப் பின்னர்
செருத்தலை வீரர்க்கெல்லாந் தலைவராய் வதிந்ததிண்டோட்
டிருத்தகு வேந்தரான விருவரைச் செறிந்து சொல்வான்.

(இ-ள்.) கையிலேந்திய தண்டையும் வாசனை வீசுகின்ற புஷ்ப மாலையையும் நீட்டி அந்தப் பேரவையிலுள்ளோர் அனைவர்க்கும் பொதுவாகத் தன் குறையைச் சொல்லி வேண்டிக்கொண்டு பின்பு

யுத்தகளத்தில் அநேக வீரர்களுக் கதிபதிகளாய்ப் போர் நடத்தும் பெருமையைப்பெற்ற புஜபராக்கிரமமுடையராய் செல்வம் நிறைந்த இராஜாதி ராஜர்களாகிய இருவரையும் நோக்கிச் சொல்வானாயினன்.

4. தராய் நகர்ப்புரிசை யாவுந் தறையொடுந்தாழவென்று
புராவிய செல்வமெல்லாம் பான்மையினும்மவாக்கி
விராவிய விழைவு முற்றி மீண்டுநுந்தேய மேவித்
தராதலம் புரந்து வாழ்வீர் தற்பரனருளான் மாதோ.

(இ-ள்.) சத்துருஸ்தானமாகிய தராய்ப் பட்டணத்தின் (Troy) கோட்டையைத் தறையோடு தறையாய் மறிந்து வீழும்படித் தகர்த்துச் செயித்து அப்பதியிலுள்ள அளவற்ற செல்வங்களையெல்லாம் சுவாதீனப்படுத்தி நீங்கள் கோரிவந்த காரியம் நிறைவேறி மீண்டும் உங்கள் நாட்டுக்குச் சென்று ராஜ்யத்தை யாண்டுகொண்டு தற்பரன் அருளால் நெடுநாள் சுகமாக வாழ்ந்திருப்பீர்கள்.

5. அருந்தவமனைத்து மாற்றி யரிதுறு மகவை நீங்கி
இருந்துயர் மூழ்கிநின்ற வேழையேற் கிரங்கி யென்றன்
முருந்திள மூலராளை முனிவுறு தருள்வீர் யான்கொள்
வருந்துறல் காணீரேனும் வழங்கு மிப்பொருள்கள் கண்டே.

(இ-ள்.) செய்தற்கரிய அநேக தவங்களைச் செய்து அருமையாகப் பெற்றெடுத்த என் குழந்தையை நீங்கி ஆற்றற்கரிய கொடுந்துயரில் மூழ்கியிருக்கும் எளியேனுக்கிரங்கி என் அரும் புதல்வியைச் சிறையினின்றும் விடுத்துக்கொடுத்தல் வேண்டும். என்னுடைய துக்கத்தைக் கண்டு உங்களுக்கு மனமிரங்காவிடினும் யான் உமக்குக் கொடுக்க நின்ற பெருந் திரவியத்துக்காகவாயினும் இவ்வுதவி நீர் செய்யவேண்டும்.

6. உறுகணென் றும்மைச் சாரா தும்பரானுவந்து காப்பன்
மறுவி லென்மகளை யீந்தென் மனத்துயர் மாற்றுவீரேல்,
முறைபல முயல்வீராயின் முன்னவன் முனிவுக்காளாய்
அறவுநீர் வருந்திமுற்று மழிவது திண்ணமாமே.

(இ-ள்) நீங்கள் என் குற்றமற்ற புதல்வியை விடுவித்துத் தந்து என் விசனத்தை நீக்குவீர்களானால் உங்களுக்கு யாதொரு தீங்கும் வராமல் தற்பரன் உங்களைக் காத்தருளுவார். அப்படிக் கன்றி அநியாயமான காரியங்களைச் செய்வீரானால் அக்கடவுளுடைய கோபத்துக்குப் பாத்திராகி அழிந்து போவது நிச்சயம் என்று கூறினன்.

வேறு.

7. என்னுமாற்ற மிருசெவி யேற்றலும்
துன்னிநின்ற துணைவர்கள் யாவரும்
அன்னதாகு மவனுளத் தேமுறக்
கன்னிதன்னை விடுத்தல் கடனென்றார்.

(இ-ள்) இவ்வாறு கிரிசன் கூறிய வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் அரசனைச் சூழ்ந்து நின்ற வீரர்களெல்லோரும் அவன் சொல்லியது நியாயமேயாகும்; அவன் களிக்கும்படி அவன் புத்திரியை அவனோடு கூட்டியனுப்புதலே முறைமையாகும் என்றார்கள்.

8. வேந்தனா மத்திரிதன் வெகுண்டனன்
ஈந்த மந்திரரின்னுரை யேற்கலான்
போந்த பூசகன்றன்முகநோக்கியே
காந்தியின்ன கழறலுற் றனரோ.

(இ-ள்) அவ்வார்த்தைகளைக் கேட்டபோது அரசனாகிய அத்திரிதன் (Atrides) கடுங்கோபங் கொண்டு தன் மந்திரிகள் கூறிய ஹிதவசனங்களைக் கேளானாகி அந்தப் பூசகனைப் பார்த்து சினத்தோடும் பின் வருமாறு கூறலாயினான்.

9. எண்ணலாதிவ ணேழை மதியினாய்
நண்ணியாது நவின்றனை நீயுமின்
றுண்ணிலாவு முயிரொடு போதியேல்
வண்ண மேகலை யாளைமறத்தியால்.

(இ-ள்) எபேதாய் என் முன்னே வந்து ஆலோசியாது, யாது கூறினாய்? உனக்கு உயிர் பிழைத்துப் போக எண்ண முண்டானால் நின்மகளை மீண்டும் பெறவேண்டு மென்னும் ஆசையை முற்றும் விட்டு விடுவாயாக.

10. நின்னையஞ்சல னீதொழுந் தெய்வதம்
தன்னை யஞ்சலன் றுள்குழலாளினி
என்னளென்னொடிருந்திடலேயலால்
உன்னொடேகவு முய்த்திடுவேன் கொலோ.

(இ-ள்) உனக்கும் அஞ்சேன் நீ உபாசிக்கும் தெய்வமாகிய கதிர்க்கடவுளுக்கும் அஞ்சமாட்டேன். உன்மகள் இனிமேல் எனக்கே உரியவளாவாள். ஆதலின் அவளை என்னோடு வைத்திருத்தலல்லாமல் உன்னோடு கூட்டியனுப்புவேனோ நான்?

11. எழிலுமார்ந்த விளமையு மேய்ந்துள
பொழுதுன் பாவையைப் போகவிடுப்பனோ
முழுதுமங்கல மூப்பினிற் றீர்கினும்
தொழுதென்னேவலிற் றுன்ன வைப் பேனரோ.

(இ-ள்) அழகும் இளமையும் ஒருங்கே பெற்றுள்ள காலத்தில் உன்மகளை அநுபவியாமல் விட்டு விடுவேனோ? அவள் கிழத்தன்மையையடைந்து தன் அழகு முழுதும் இழக்க வந்த காலத்தும் அவளை எனக்குப் பணிவிடை செய்திருக்கும்படி அமர்த்திக் கொள்வேனேயன்றி அப்போதும் நான் விடப் போவதில்லை.

12. அழுதென் னாவதிங் காவலித் தாவதென்
தொழுதென்னாவது தூற்றி யென்னாவதால்

இழுதை நெஞ்சினை யென்னொடு மேந்திழை
பழுதிலாது படர்வது திண்ணமால்.

(இ-ள்) நீ இப்போது அழுதும் பயனில்லை. ஆற்றியும் பயனில்லை; என்னை வணங்கித் துதித்தும் பயனில்லை. இகழ்ந்து தூற்றியும் பயனில்லை. ஏபேதாய் உன் மகளை நான் என்னோடு கூட்டிச் செல்லுதல் நிச்சயம் என்றான்.

13. மாற்ற மன்னது கேட்டலும் வாய்வெரீஇத்
தோற்றமிக்க சுடரவன் பூசகன்
ஆற்றகில்ல னருந்துயரேகியே
போற்றும் வெய்யவன் பூவடி தேடினன்.

(இ-ள்) அவ்வார்த்தைகளைக் கேட்டபோது கதிரவன் பூசகனாகிய அக்கிரிசன் அளவற்ற அச்சமும் துயரமுமடைந்து தன்னிஷ்ட தேவதையாகிய கதிர்க்கடவுளின் சந்நிதியில் சென்று தன் குறைகளைச் சொல்லி வேண்டலுற்றான்.

14. உலகிலிரு ளோட்டி யொளி செயும்
அலகில் சோதிக் கமர்நிலை யாயினை
விலகலாதுன் விளங்குறு கோயிலில்
இலகுபூந் தொடையின்புற நாற்றியே.

(இ-ள்.) உலகின் கண்ணே நிறைந்துள்ள இருளை நீக்கிப் பிரகாசிக்கச்செய்யும் எல்லையில்லாத பேரொளிக் கிருப்பிடமான என் இஷ்ட தெய்வமே, நான் உன்னைவிட்டுப் பிரியாமல் சதாகாலமும் உன் கோயிலில் பூமாலைகளால் அலங்கரித்து,

15. பூசையாவும் பொருந்துறச் செய்துனக்
காசிலேற்றை யமர்ந்தவி நல்குவேன்
தேசினை செயலை யுவத்தியேல்
காசிலா தெனைக் காத்திடற்பாலதே.

(இ-ள்) செய்தற்குரிய பூசனையெல்லாம் விதிப்படிச்செய்து குற்றமற்ற காளைக்கன்றுகளைப் பலியிட்டு நிவேதிப்பேனன்றோ. ஆதலின் நான் செய்யும் வந்தனை வழிபாடுகளுக்கு நீ மகிழ்ச்சியடைவது உண்மையேயானால் என்னுடைய துயரத்தை நீக்கி என்னை ரக்ஷித்தல் உனக்கு முறைமையாகும்.

16. அடிமைபூண்ட வெனக்கிடராற்றிய
கொடுமைமேய கிரேக்கர் குலத்தொடும்
மடியுமாறு வருத்திடல் வேண்டினேன்
முடியுமாவருள் முற்றிடுவாயரோ.

(இ-ள்.) நின்னடியேனாகிய எனக்குக் கெடுதி செய்த கொடியோர்களாகிய கிரேக்கர்கள் நிர்மூலமாகும்படிச் செய்தாலொழிய என் துயரம் ஆறாதாதலின் அவ்வாறு செய்ய வேண்டினேன் என் வேண்டுகொளுக் கிரங்கியருளல் வேண்டும் என்றனன்.

17. அன்னவாசகங் கேட்டனு மாதவன்
உன்னதுள்ளத் துயரொழிப் பேனெனப்
பொன்னினோங்கு பொருப்பொலிம்பா வொரீஇத்
துன்னலாருறு சூழல் புக்கானரோ.

(இ-ள்!) அவ்வார்த்தைகளைக் கேட்டபோது கதிர்க்கடவுளும் அவனை நோக்கி நீ வருந்தவேண்டாம், உன் மனத்துயரை நான் நீக்குகின்றேன் என்று அருளிச்செய்து தன்னிருப்பிடமாகிய ஒலிம்பா மலையைவிட்டுக் கிரேக்கர்தங்கிய இடத்தை நோக்கிச் சென்றனன்.

18. ஏய்ந்த நாண்டநு வேற்றினனேதிலர்க்
காய்ந்திடுஞ் சினத்தாற் செலுங்காலையில்
வாய்ந்தவெள்ளிவடிச்சரந் தூணியில்
தேய்ந்து மோதிப் பெருந்தொனி செய்தவே.

(இ-ள்.) தனது கையிலேந்திய வில்லில் நாணேற்றிக் குணத்தொனி செய்து பகைவர் குலத்தைக் கொல்லவேண்டி அதிகோபம் கொண்டு மகா வேகமாகச் செல்லுங்காலையில் அம்புறை தூணியில் அணிந்திருந்த கூரிய வெள்ளிப்பாணங்கள் ஒன்றோடொன்று உராந்து தாக்கிப் பேரொலியைச் செய்தன.

19. உருத்திராவென வோங்கிருண் மூடிவண்
சரத்தின்மாரி யுலப்பில தாக்கலும்
எரித்ததாரழலாய தொர் வெம்பிணி
வருத்தமீறிப் பகைக்குல மாய்ந்ததே.

(இ-ள்.) கோபம்கொண்டு இரவைப்போல எங்கும் நிறைந்த இருளைப் பரப்பி சரங்களை மழைபோலப் பொழிந்து பகைவரை அடர்த்த காலத்தில் அக்நி ரூபமாகிய ஓர் கொடிய வெப்பு நோயில் வருந்திப் பகைவர் கூட்டங்கள் கணக்கில்லாமல் மடிந்தன.

20. அழன்ற வெம்பிணி யாற்பக லொன்பதாங்
குழன்ற தாலவ் வெவனர்த மொண்படை
கழன்ற தாவி யக்காலனும் சோர்ந்தனன்
சுழன்று யாருந் துயரிடை மூழ்கினர்.

(இ-ள்.) இவ்வாறு கொளுத்திய வெப்பு நோயினால் ஒன்பதுநாள் கிரேக்க சைனியங்கள் வருந்தி மடிந்தன. காலனும் வாங்கி வாங்கி யுண்டுக் கைசலித்தனன். இன்னது செய்வதென்றறியாமல் மனங்கலங்கி அனைவரும் துயர்க்கடலில் மூழ்கினர்கள்.

(தொடரும்.)

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

## SOME PRINCIPLES BEARING ON "SCHOOL DISCIPLINE."

## *பாடசாலை ஒழுங்கைப்பற்றிய சில விஷயங்கள்.

"**சீர்கெட்டசெய்கை சிலதவுறும்**" என்றவாறு எவ்வகைக்காரியங்களாயினும் அவற்றை ஒரு சீராய் அல்லது ஒழுங்காய்ச்செய்யின் ஏனையோர்க்கன்றி தனக்கும் ஓர் பேரானந்தத்தை விளைவிக்குமென்பது சந்தேகமின்றி அறியக்கூடியதாக விருக்கின்றது. பாடசாலையில் ஓர் ஆசிரியன் இவ்வித ஒழுங்கை அனுசரிக்கத்தவறினால் அவன் பாடுபட்டு கற்றுக் கொடுத்த விஷயங்கள் எல்லாம் அந்தோபயனற்றவையே ஆகும். ஆகவேபாடசாலைக்கு 'ஒழுங்கு' (discipline) என்பது முக்கிய சாதனமாயும், இன்றியமையாததாயு மிருக்கின்றது. ஒருமாணாக்கனது பக்குவமற்ற மனதைத்திருத்தி ஞானமாம் பயிரை நட்டு சன்மார்க்கமாம் நீரைப்பாய்ச்சி நல்லபயனைப் பெற ஒரு ஆசிரியன் முயலவேண்டும். பிள்ளைகளை ஒழுங்காய் இருக்கச்செய்தால்தான் தனக்கு இவை யெல்லாம் கைகூடும். ஆகவே ஒழுங்கைப் பற்றி களிக்கவேண்டியது அதிக அவசியமென ஏற்படுகின்றது. ஒரு ஆசிரியன் முக்கியமாய் பிள்ளைகளின் 1. கவனம், 2. கீழ்ப்படியுந்தன்மை, 3. சுறுசுறுப்பு, 4. வாய்மையுடைமை, 5. சன்மார்க்கம், 6. வேலையில் அபிமானம், இவ்வித சிறந்த குணங்களை விளக்கிக்காட்டி விருத்திசெய்யவேண்டும். பாடசாலையின் ஒழுங்கு ஒரு ஆசிரியனது நடவடிக்கையை ஒத்தேயிருக்கின்றது. "கலைமகன் எவ்வாறோ அவ்வாறே கலாசாலை" என்று Guizot (கூஜாட்) சொல்லியுள்ளர். ஒரு ஆசிரியரின் குணாதிசயம், மாணாக்கரை யடக்கி யாளும் திறமை, அவர்களுக்கு போதிக்கும் முக்கிய குணங்கள் ஆகிய இவற்றைக் கொண்டே 'ஒழுங்கு' இத்தன்மையதென நிதானிக்கலாம். மேலும் இதைக்குறித்தே ஒரு அமெரிக்கா வித்வான் சொல்லுகிறதாவது: "ஒரு மாணாக்கன் தன் ஆசிரியரின் குரல், நடவடிக்கை,பார்வை, இவைகளை எல்லாம் கவனித்துவருகிறதால் அவரது போதனா விஷயங்களை யன்றி மேற்கண்டவைகளையும் பார்த்து அனுஷ்டிக்கத் தொடங்குகிறான். தன் ஆசிரியன் திடசித்த முள்ளவனாவென்பதை அவருடையபார்வையாலும், குரலாலும், இன்னும் வேறே எவ்வகையாலும் தெரிந்துகொள்ளுகிறான். ஆனது பற்றி அவர் திட சித்தமுள்ளவராய் இருக்கவேண்டியது அவசியம், ஏனெனில் அது தான் பள்ளிக்கூடத்திற்கு உயிரென விளங்குகின்றது. திடசித்தமும், அடக்கமுந்தான் ஆசிரியனது அணிகலம். ஏனெனில் இவற்றைக்கொண்டுதான் ஜனங்கள் பள்ளிக்கூடத்தின் தன்மையை அறிந்துகொள்ளுகிறார்கள். ஒரு ஆசிரியன் திடசித்தமும், அடக்கமு முள்ளவனாக இருந்தால் பிள்ளைகள் சுறுசுறுப்புள்ளவர்களென்றும், நல்ல நடவடிக்கை யுள்ளவர்களென்றும் தெரிந்து கொள்ளுகிறார்கள். அவ்வாறு இல்லாமற்போனால் பள்ளிக்கூடம் க்ஷீணதிசையில் இருக்கிறதென எண்ணுகிறார்கள், இந்த திட சித்தத்தைப்பெறவேண்டுமெனின் ஒரு ஆசிரியன் தன்னாலியன்ற அளவு மனப்பூர்த்தியாய் உழைக்கிறேனென்று சங்கற்பித்துக்கொள்ளவேண்டும். அடக்கமென்னும் சிறந்த குணத்தை கைக்கொள்ளவேண்டுமெனின் மேலானகுணங்களையே உன்னி பொறுமையுடன் உழைத்துவந்தால் அது தானாகவே அமையுமென்பதில் ஐயமில்லை. இவ்விதகுணங்களெல்லாம் நாளாவர்த்தியில் பிள்ளைகளையும் அடையும். பிள்ளைகளுக்கு ஒன்றைப்பார்த்து நடக்கும் சக்தி விசேஷமாயிருப்பதால் உபாத்தியாயர் சன்மார்க்கத்தையே போதித்து அதைத்தன் நடவடிக்கையிலும் காட்டவேண்டும். அப்போது தான் அவர்கள் மனப்பயிற்சியடைந்து எல்லா நற்குணங்களையும் கண்டுணர்ந்து அனுஷ்டிப்பார்கள். ஒரு ஆசிரியர் சொல்வதொன்று செய்வதொன்றாய் இருக்கக்கூடாது. பிள்ளைகள் சரியான காலத்தில் பள்ளிக்குவரவேண்டுமென்று சொல்லிவிட்டு தான் நேரம் கழித்துப்போதலும், சாந்தமாயிருக்கவேண்டுமென்று தான் கோபித்துரைத்தலும், அடக்கம் அவசியமென்று தான் ஆத்திரப்படுவதும் கூடாது. பிள்ளைகளுக்கு போதிக்க வேண்டாமென்று எண்ணங்கொண்டவைகளை ஒரு போதும் அவ

* An essay read by A.K. Sivarama Aiyar before the Teachers' Association, Karur. கரூர் உபாத்தியாயர் சங்கத்தின்முன் படித்த ஒருவியாசம்.

ர்கள் முன்னிலையில் வெளியிடக்கூடாது. பக்குவமற்ற பாலர்களின் மனதைத்திருத்தி நற்போதனைகளைச் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் பெற்றோர்கள் ஆசிரியர்பால் எதிர்பார்க்கிறதினால் அவர் வெகு ஜாக்கிரதையாய் தாம் எடுத்துக்கொண்டவேலையை திருப்திகரமாய்ச்செய்ய முயலவேண்டும். பிள்ளைகள் ஆசிரியரை தந்தைபோல மதித்து அவர் சொற்படிகேட்டு நடக்கவேண்டுமென்ற ஆசைமேலிட்டும் இருப்பார்கள். அவர்களை சுறுசுறுப்பும், உபயோகமும், சந்தோஷமும் உள்ளவர்களாகச்செய்வதும் அல்லது சோம்பேறியும், அறிவீனர்களுமாகச் செய்வதும் ஓராசரியன் திறத்தை ஒத்திருக்கின்றது. அவர் நியாயமாயும், பட்சமுள்ளவராயுமிருந்தால் தம் மாணாக்கனும் அவ்வாறே இருப்பான். ஆகையால் அவர் தம் நடத்தையையும், போதனாமுறைகளையும்பற்றி விசேஷ கவலை எடுத்துக்கொண்டு போதிக்கவேண்டும். மேற்கண்ட அறுவகைக் குணங்களிற், '**கவனம்**' என்பதைப்பற்றி சற்றுவிளக்குவோம். ஒருவன் தான் துவக்கும் வேலையில் தன் முழு மனதையும் செலுத்தி எள்ளளவேனும் வேறெவ்வித விஷயங்களிலும் தன் மனதைப் பலிகொடாமலிருத்தலே 'கவனம்' என்று கூறத்தக்கது. பள்ளியிற் சத்தமில்லாமலும், சில்லரை விஷயங்களிற் புத்தி செலுத்தாமலும், உபாத்தியாயரைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாலும் பிள்ளைகள் கவனித்துவருகிறார்கள் என ஊகிக்க இடமில்லை. ஏனெனில் அவர்கள் மனது புறம்போந்துசஞ்சரித்துக்கொண்டிருக்கலாம். வேறேதாவது தம் கண்களுக்குத் தோற்றப்பட்ட வஸ்துக்களின்மேல் மனதைச்செலுத்தி இருக்கலாம். முழுகவனத்தையின்றி பாதிகவனத்தை செலுத்தி இருக்கலாம். ஆகையால் விருத்தியடைய வேண்டுமென்ற எண்ணத்துடன் வேறொருவருடைய நிர்ப்பந்தமின்றி தாங்களே மனதை ஒரே நிலையில் நிறுத்தி ஆசிரியர் போதிக்கும் எவற்றையும் கிரகித்து வருவதுதான் சரியான கவனமெனக் கொள்ளற்பாலது. இவ்வகையான கவனத்தைத்தேடுவது அவரது முக்கியகருத்தாயிருக்கவேண்டும். தம் தொழிலுக்குப் பிள்ளைகளின் கவனம் இன்றியமையாதது. கவனம் அரை குறையாயிருந்தால் போதனையும் அவ்வாறேதான். கவனம்என்பது இலையாயின் போதனையும் இல்லையென்றே கொள்ளல்வேண்டும். அவர் பாடுபட்டு போதித்தவை எல்லாம் பயனற்றன வெனவே கொள்ளல்வேண்டும். கவனம் பிள்ளைகளின் மனதையும், தேகஸ்திதியையும் ஒத்ததாக விருக்கின்றது. எங்ஙனமெனின் வேனிற்காலத்தில் விசேஷ தாபத்தால் களைப்படைந்தபோதும், ஒரே தன்மையான வேலையை குறிப்பிட்டகாலத்திற்கு மேலே செய்யச் சொன்னபோதும், இடம் மாற்றாமல் ஒரே இடத்தில் உட்கார வைத்திருந்தபோதும் ஒரு வகுப்பு கவனமாயிருக்குமென்று நினைக்க சற்றேனுமிடமில்லை. போதித்த விஷயங்களைப் பிள்ளைகள் கிரகிக்க சிரமப்படுவதாயிருந்தால் கவனம் என்பது சூன்யமென்றே கொள்ளவேண்டும். (*Vide* Currie on Education) பிள்ளைகளுக்குக் காலத்திற்கு ஏற்றவண்ணம் வேலையைக்கொடுத்துக் கொண்டுவந்தால் அவர்களின் கவனத்தை எளிதிற் பெறலாம். இதுவுமன்றி இடமாற்றுதல், கைதூக்கும்படிசெய்தல் என்ற இவ்வகைச் செயல்களாலும் அவர்களின் மனதைக் கைவசப்படுத்தலாம். வகுப்பில் பிள்ளைகள் ஏராளமாயிருப்பின் அப்போது முழுகவனம் பெறவேண்டின் அதிக சாமர்த்தியம், யுக்தி, புத்தியையும் ஓராசரியர் உடைத்தாயிருக்கவேண்டும். ஒருவன் தன்னைப்பார்த்துக் கொண்டே இருக்கலாம்; ஒருவன் கவனிக்கிறதாய் பாவனை செய்துகொண்டு வேறொன்றைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருக்கலாம். ஒருவன் முன் பின் யோசனையில்லாமல் விடை பகரலாம். இங்ஙனம் பிள்ளைகள் வழிபிசகி நடக்கக்கூடும். அடிக்கடி இடம் மாற்றிக்கொண்டுவந்தால் அவர்கள் உற்சாகத்தோடு கவனம்செலுத்திவருவார்கள். இப்படிசெய்தால் காலதாமதம் ஆகுமென்று சிலர் எண்ணுகிறார்கள். வகுப்பில் அவர்களை சரியாக உட்காரவைத்திருந்தால் சொற்பகாலத்திலேயே இதைச் செய்துமுடிக்கலாம். வகுப்பைப் பார்த்து கேள்விகேட்டு விடைபகரக் கூடியவர்களைக் கைதூக்கச்செய்து தான் குறிப்பிட்டவனைக் கேட்கவேண்டும். இவ்வாறு செய்வதால் அவர்கள் ஒவ்வொருவரும் தன்னைக் கேட்பார், தன்னைக் கேட்பார், என்ற எண்ணத்துடன் கவனமாயிருப்பார்கள். ஆனதுபற்றி இதை அடிக்கடி செய்துவரவேண்டும். ஆனால் இவ்வாறு முக்கியமாய் சோம்பேறிகளையும், கவனிக்காதவர்களையும் பார்த்துக் கேள்வி கேட்கவேண்டும்.

கீழ்ப்படியுந்தன்மை:—பிள்ளைகளைக் கீழ்ப்படியும்படி செய்வது உபாத்தியாயரின் கடன். அவரால் முடியாவிட்டால் அவருடைய் தேகஸ்திதி, குணம், சுகம், இவைகளெல்லாம் வீணாய்க்கெட்டு அவலமாய்ப் போம். இதைப்பற்றி Fitch என்பவர் சொல்லுகிறதாவது "ஒருவர் தமது கம்பீர தோற்றத்தினுலும், அல்லது கட்டாயப்படுத்தியாகிலும் கீழ்ப்படியும்படி செய்யவேண்டும். இவற்றுள் முற்கூறியபடி செய்யத் தவறினாலும் கட்டாயப் படுத்தியாவது பிள்ளைகளைக் கீழ்ப்படும்படி செய்யவேண்டும். இவ்வாறு செய்யத்தவறினால் ஒரு வேலையும் செய்யமுடியாமற் போவது மன்றி பாடசாலைகளுக்குப் பிள்ளைகளை அனுப்பும் நோக்கமும் ஈடேறாமற் போய்விடும்." கீழமைவு முற்றும் பிரயோசனமாயிருக்க வேண்டுமெனின் பிள்ளைகள் அதை உற்சாகமாயும் மனப்பூர்த்தியாயும் செய்துவரவேண்டும். தண்டித்து அல்லது மருட்டி கீழ்ப்படியும்படி செய்தால் மனப்பூர்த்தியாயும், உற்சாகத்தோடும் செய்ததாக ஏற்படாது. நல்ல வார்த்தையாலும், நியாயமெடுத்துரைப்பதாலும் இவ்வாறு செய்யலாம். ஆனால் இது யுக்தமல்லவெனத்தோற்றுகின்றது. ஏனெனில் பிள்ளைகளுக்கு ஆசிரியர் பால் உளமதிப்புக் குன்றிப் போகவே அடக்கமென்பது இல்லாமற் போய்விடும். ஒரு மாணாக்கன் முன்பின் யோசனையின்றி திடீரெனவும், சுறு சுறுப்பாயும், தாமதமின்றியும் கீழ்ப்படியவேண்டும். தன்னை மிரட்டின அல்லது தண்டித்தபிறகுதான் செய்யவேண்டு மென்றிராமல் தானாகவே கீழ்ப்படியவேண்டுமென்ற எண்ணம் உதித்து பெரியோர் சொற்படி நடக்கவேண்டுமென்று நிச்சயப்படுத்திக் கொள்வதுதான் ஒரு நல்ல மாணாக்கனின்இலட்சணம். ஏனெனின்விஷயங்களை ஆராயும் சக்தி பிள்ளைகட்குப் போதா தாதலாலும் அவர்கட்கு எடுத்துச்சொன்னாலும் தாரதம்மியம் தெரிந்துகொள்ளக் கூடாதானவர்களாதலாலும் அவர்களிடத்தில் காரணத்தைச் சொல்லாமலிருப்பதே நலமெனவிளங்கும்." என்று Robinson என்பவர் கூறுகிறார். கட்டளைகள் சொற்பமாயிருத்தல் வேண்டும். எதையும் இருமுறைசொல்ல லாகாது. கூடுமானவரையில் சுருக்கமாயும், அதிகாரமான தொனியுடனும் கட்டளை யிடவேண்டும். பாலர்கள் செய்யும் அற்புதப் பதங்களாகிய விளையாடல், பேசிக்கொண்டிருத்தல், முதலிய வைகளைப்பற்றி அதிகமாய் கவனித்து அவர்களை வருத்தப்படுத்தக்கூடாது. மேலும் அற்பவேலைகளையும் ஒழுங்காய்ச் செய்யும்படி கற்பிக்கவேண்டும். புஸ்தகம், கற்பலகை இவைகளைப் பிடித்துக் கொள்ளும் விதமும் உட்காரும் போதும், நிற்கும் போதும் உள்ளவிதமும் வகுப்பில் பிரவேசிக்கும் போதும், வெளியே போகும் போதும், உள்ளவிதமும் ஆகிய இவற்றை எல்லாம் ஒரு ஆசிரியர் கவனிக்கவேண்டும். இவ்வாறு செய்து வந்தால் அவர்கட்கு அநேக நல்ல வழக்கங்கள் பிடிபட்டு நலமடைவார்கள்.

சுறுசுறுப்பு:—காரியசித்தி பெறும் வண்ணம் எப்போதும் மெய்வருந்திக்கொண்டிருத்தலே "சுறுசுறுப்பு" என்ற பதப்பொருள். ஒரு காரியம் கைகூடவேண்டுமெனின் விசேஷ புத்தி கூர்மைவேண்டுமென்றே இல்லை. "முயற்சியுடையோர் இகழ்ச்சியடையார்" என்று ஔவையார் சொன்னபடி முயற்சி ஒன்று இருந்தால் போதும். அது இல்லையெனின் எவ்வகை புத்தியும் பயனற்றதேயாம். இதைப் பற்றி Aesop சொன்ன முயலும் ஆமையும் என்ற கதையால் நன்கு விளங்கும். Solomon என்பவர் "முயற்சியுடையோன் செல்வமுடையோன்" என்று சொல்லியுளர். மேலும் "மெய்வருந்தி உழைப்போன் உலகை ஆள்வான்" என்றும், சுறுசுறுப்புள்ள மனிதனைப்பார்! அவன் மன்னன் முன்னிலையில் வீற்றிருப்பான். கீழ்மக்களோடு கலந்திரான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (Vide Prov. X. 4, XII. 24 and XXII. 9.) சரித்திரங்களிலும் அனேக உதாரணங்களைக்காணலாம். குவாலியர் இராஜவம்சத்தை ஸ்தாபித்த ஸிந்தியாவென்பவர் ஆதியில் ஒரு யஜமானனிடம் அடிமையாயிருந்து குற்றேவல் செய்து பிறகு தமது விடாமுயற்சியால் உயர்ந்த பதவிக்கு வந்தாரென சரித்திரத்தால் விளங்குகிறன்து. இம்முயற்சியின் சிறப்பைக் குறித்து திருவள்ளுவர்,

"அருமை யுடைத் தென்றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சிதரும்" என்று கூறியுளர். இன்னும் இவை போன்ற பல திருஷ்டாந்தங்கள் உள.

* * * *

* * * *

**வாய்மையுடைமை:**-இதைப்பற்றித் திருவள்ளுவர்,

"வாய்மை யெனப்படுவது யாதெனின் யாதொன்றுந்
தீமையிலாத சொலல்."

என்று சொல்லியுளர். அதாவது நாம் செய்ய அல்லது சொல்ல நினைக்கிற ஒவ்வொரு விஷயமும் பிறர்க்குத் தீங்கு விளைக்காதபடி உண்மையாகவிருக்கவேண்டும். இக்குணத்தின் மேன்மை சிறுவர்களுக்கு விளங்குவது அறிதாதலின் இதில் விசேட பற்றுடையவராகக் காணப்படுகிறதில்லை. என்றாலும் அஃது சரியான வழி என்று மாத்திரம் உணருகிறான். எங்ஙனமெனின் தான் உண்மையை மறைத்து எதாவதொன்றைச்சொல்லி அதைப் பிறர் கண்டுபிடித்தால் தன் முகக்குறியால் தன் வெறுப்பை வெளியிடுகிறான். அல்லது தன்னிடத்தில் யாராவது உள்ளபடி சொல்லாமல் மறைத்துச் சொன்னால் கோபக்குறியைக் காட்டுகிறான். உண்மையை மறைத்துப் பொய் புகலும் மார்க்கங்கள் பல உள. அவையாவன: 1. தான் செய்யத்தகாத காரியத்தை செய்துவிட்டு செய்ததற்காக மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுதல். 2. உள்ளவற்றைப் பதின் மடங்கு அதிகமாகச் சிறப்பித்துக்கூறல். 3. பல பொருள்படக் கூறி உண்மை விளங்காமற் போகச்செய்தல். 4. தெரிந்தவன் போல் பாசாங்கு செய்து பிறர் உண்மையெனக் கொள்ளும்படி சும்மாவிருத்தல். 5. முன்பின் யோசனை செய்யாமல் வாக்களித்த பிறகு அதைப்போற்றத் தவறிப்போதல். 6. வாக்குக் கொடுத்தபடி நடக்கத் திறமையுளதேனும் அவ்வாறு செய்யத்துணியாமல் அசட்டையாயிருத்தல்: இங்ஙனம் பிள்ளைகள் பலவகைகளிலும் தவறிப்போக இடமிருத்தலால் அவர்களுக்கு உண்மையென்ற சிறந்த குணத்தைச் சிறுவயதிலேயே மனத்தில் வேரூன்றி வழக்கத்தில் அனுசரிக்கும்படி செய்வது ஆசானது முக்கிய கடமை. (Vide Currie, P. 44). ஆழ்ந்த நோக்கின் ஊக்கமின்மையே பொய் சொல்வதற்குக் காரணமாம். மேலும் இஃதே புறங்கூறல், கையொப்ப மற்றபத்திரங்கள் வரைதல், முதலிய கெட்டகுணங்களுக்கும் காரணமாம். ஆனதுபற்றி ஊக்கத்தையும், உண்மையையும் ஒரு மாணாக்கன் கைசோரவிடாது அவற்றை முக்கிய சாதனமாகக் கொள்ளல்வேண்டும்.

ஏ. கே. சிவாராம ஐயர்.

(இன்னும் வரும்.)

## Selection.

### A GLANCE AT SRI KRISHNA.

### ஸ்ரீகிருஷ்ணப்பிரபாவம்.

"மாணிக்கத் தோற்றமும் ஜோதி
ப்ரவாஹமும்."*

நல்லவர்க்கெல்லாம் நடுநாயகமான வல்லவனொருவ னிருக்கின்றனன்! அவன் ஆளுக் கேற்றது போலும் வேளைக்கிசைந்தது போலும் வேடம் போடும் நாடகக்காரனாயினும், கெட்ட தொன்றும்பொட்டென விளைப்பதில்லை. ஆன்மாக்கள் உய்ந்து ஆனந்தமடைவதே, என்றும் அவனுக்கு நன்றாகிறது. அவர்கள் நிலைமைக் கேற்கத் தலைமை பூண்டு, அற்புதம் புரியும் பொற்பினன், அவன். மீனாய்த்தோன்றி மிடுக்கொழித்தா னொருதரம்! கூர்மமாகி ஆர்வம் விளைத்தான் ஒருதரம்! பன்றியாய்ப் பாரிடந்து நன்றே விளைத்தான் பிறிதொருதடவை! பின்னர் அவனே மன்னிய சிங்கமும் மனிதனுமாகி, சிறியனைக் காத்துக்கொடியனைக் கொன்றான்! வாமனனாகிப் பூமியும் வானும் புகழ்பெற அளந்தான்! பாசுராமனாய்ப் பிறகு அரசாராமனாயினன்!

#### ஸ்ரீகிருஷ்ணன் அவதாரம்.

இப்பொழுது ஒருநாள் அர்த்த ராத்திரியாய்விட்டது! இரவினா லுண்டாகும் இருள் போதாது, மருளும் இணையாய்த் தோன்றின, இவ் அகாத வேளையில் தகாத கோலம் பூண்டு, சுத்த சத்துவராகும் நற்றவரொருவர், சற்று முன் சனித்த சித்திரக் குழந்தை யொன்றைக் கைத்தலத்தேந்தி அயலார்க்குத் தெரியாமல் வெளியே செல்ல முயலாது முயலுகின்றார்! அவரிருந்த இடமோ, அரணும் அரங்கமும் கோட்டையும் கொத்தளமும் காவலாளரும் ஏவலாள

* ஸ்ரீ கிருஷ்ணசைதன்ய சரித்திரம் எழுதிய தி. பக்தவத்ஸலம் பிள்ளை யவர்கள் இயற்றிய பாயிரத்திலிருந்தெடுக்கப்பட்டது.

ரும் சுற்றிலும் நின்று முற்றிலும் காத்த கொற்றவர் மாளிகையா யிருந்தது! இவைகளைக் கடந்து எப்படி செல்வ தென்று இல்லாததெல்லாம் எண்ணி யெண்ணி இப்பெரியவர் எங்குகின்றார்! வாட்ட மென்பதே இவர் நாட்டந் தன்னில் ஒட்டம் பெற்றிருந்தது! தேகம் வன்மை யுற்ற தாயினும், தாகம் ஏதோ இவர் மனதைத் தவிக்கச்செய்ததால் ஏகமாய் இளைத்துக் காட்டிற்று! காலிலே விலங்கும், கதவிலே தாழும்! சுற்றியும் காவல் மெத்தவும் தொந்தரை! இத்தனையும் தாண்டி எப்படிச் செல்வார் வெளியில்? இவ்வண்ணம் எண்ணியும் எண்ணாததற்குமுன், காலின் விலங்கும் நாலாய் ஒடிந்தது! கதவின் தாளும் அதமாய்ப் போயிற்று! ஊக்கங் கொண்ட காவலாளர் ஏக்கம் பெரிதாய் நோக்கம் நீங்கித் தூக்கம் தாங்கினார்! இது தான் சமயமென்று, மெல்லப் புறப்பட்டார் நல்லவரும்! வெளியில் வந்தார், ஒளியும் கண்டார்! இருட்டையும் நோக்காது, பயமுங்கொள்ளாது, குழந்தையைத் தாங்கிச் செல்கின்றார்! அந்தக் குழந்தையோ வெகு சுந்தரமானது! அதன் நிறம் நீல நிறமாயினும் ஒளியோ மெத்தவும் சுத்தமாய் விளங்கிற்று! அதனுடன் ஆகாயத்திற்குப் போட்டி போட முடியாது. மேகமாகிற போர்வை போட்டுக் கொண்டது! அப்பொழுதே இருந்து இருந்து கையையும் காலையும் அசக்குவதாலும் ஆட்டுவதாலும், மெய்யாக அக்குழந்தை செய்யாத துடுக்குகள் செய்யுமென்பது நன்றாய் விளங்கிற்று! அது சிறிது அயர்ந்து கண்ணை மூடிக்கொண்டிருந்ததாயினும், நல்ல தூக்கமில்லையென்று சொல்லலாகும்! ஆயினும் அப்பெரியவர் அருமைக் குழந்தையை அங்கையிற்றாங்கிச் சென்றுகொண்டிருக்கின்றார்! இரவும் முற்றிக் கொண்டே வர, இருளும் மிகுத்துக் கொண்டே வந்தது! உள்ள தொந்தரை போதாதென்று, ஊருக் கருகிலுள்ள ஆறு ஒன்றிலும் பூரணப் பிரவாகம் கோரமாய்ப் போய்க்கொண்டிருந்தது. இதை யெண்ணி அதிகம் வருந்தின ராயினும், ஓயாத அவர் நடைவேகம் சாயவில்லை! * * என்ன ஆச்சரியம்! ஐயன் செல்வதற்கு ஆறும் வழிவிட்டது! அவ்வழியாகவே போய், ஆயர்பாடி யடைந்தார்! அசோதையின் பிரசவக் கிரஹத்திற் பிரவேசித்து இக் குழந்தையை அங்கே வைத்தனர்; யார்க்கும் தெரியாது திரும்பினர். இந்த சந்திரப் பிரகாச சுந்தர வடிவினனே, ஸ்ரீ கிருஷ்ணன்!

### கம்ஸன்சூழ்ச்சி.

என் இவ்வாறு நடக்கவேண்டும்? மேற்சொன்னவைகளில் எத்தனை மயக்கங்கள், எத்தனை தியக்கங்கள்! இவ்வாறு நடப்பதற்கு யாது காரணம்? சொல்லுமின் சொல்லுமின் என்று மெத்த அவசரம் எத்திசையிலும் காண்கின்றது.

அரக்கர் அம்சமுடையவனும், நல்லவருக்கு ஹிம்சை விளைப்பவனும், எல்லோரையும் தொம்ஸம் செய்பவனு மிருந்த பொல்லாத கம்ஸன் என்பவன் கண்ணனுக்கு மாமன். கண்ணனால் தனக்குத் துன்பம் உண்டாகுமென்றும் உயிருக்கே ஆபத்து உண்டாகுமென்றும் அவன் முன்னமே அறிந்திருந்ததால், எப்படி யாயினும் அக்குழந்தை பிறந்தவுடனே அதைக் கொன்றுவிடல் வேண்டு மென்று இரவும் பகலும் ஓயாக் கவலை கொண்டிருந்தான். இதனாலேயே தான் கிருஷ்ணன் தந்தை தாயாகிய தேவகீ வசுதேவர் தங்கியிருந்த அறையைச் சுற்றிக்காவல் வைத்திருந்தும் இவன் செய்த இந்திர சாலத்தைத் தந்திரமாய் மாய்த்துவிட மஹேந்திரசாலம் புரிந்து மாயவனும் வேறிடம் போய்ச்சேர்ந்தான். * *

கம்ஸனே பொல்லாத காதகன், பழிபாவத்திற் கஞ்சாத பாதகன், துயரஞ்செய்து தொல்லை விளைக்கும் தோதகன்! இவன் விழிகள் மிகச் சிவந்திருப்பவை, இவனுடைய கோரத் தொழிலைக் குறிப்பாய்க் காட்டுகின்றன. இவன் தடித்த உடலும், கறுத்தமேனியும், பருத்த உதடும், இவன் பயங்கரத்தை விளக்குகின்றன. மலைபோல் மூக்கு உயர்ந்திருக்கிறது; எந்நேரமும் பல்லை நறநறவென்று கடித்துக்கொண்டிருப்பான். இச்சண்டாள மிண்டாளன், பிறந்த குழந்தை மறைந்து போயிற்று என்றறிந்தவுடனே, துடித்தான் பதைத்தான், இரைந்தான் எழுந்தான்! கோபம் மீறித் தாபங்கொண்டான்! கோபாவேசம் கொழுந்துவிட் டெரிவதால், வாய்பேச வகையற்று நின்றான், திகைப்புற்றான், அலக்கணுற்றான்; உள்ள மெரிகின்றது; உதடு துடிக்கின்றது; சற்றுப் பொறுத்தான்: பூதகி சகடாசுரன் அகாசுரன் பகாசுரன் முதலானவர்களை யேவி அக்குழந்தையைக் கொல்ல வகைதே

டினான். இதனால் இவர்க ளெல்லோரும் நாசமாயினாரே யன்றி, குழந்தைக் கொன்றும் குறையில்லை.

கிருஷ்ணன் வளர்ச்சி.

இவ்விதமாய் எவ்வித அபாயத்திற்கும் உட்படாமல், சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல், ஸ்ரீ கிருஷ்ணன் அதிசுந்தர லாவண்யத்துடன் வளர்ந்து வருகிறான்! இவன் சுந்தரமுகமும் சுயம்பிரகாசமும், முல்லையைப்பழித்த பல்லழகும், முத்தை யிகழ்ந்த முறுவலின் வனப்பும், ஒவ்வொருவரையும் மயக்கிவிட்டது. இவனை விட்டுப் பிரிவதென்றால், எவருக்கும் வருத்தமாயே யிருந்தது. இப்பொழுது கிருஷ்ணனுக்கு வயது பதினொன்றானது. ஆயினும் தந்தை தாயாரும் ஐந்து வயது தான் மைந்தனுக்கென்று அவனிடம் இடைவிடா நேசம் பாராட்டி வந்தார்கள். அவன் சிறிது வெளியே செல்வதென்றாலும், அவர்கள் பெரிதும் வருந்தி யுருகிவிடுவார்கள். அவனுடைய நண்பரோ, தம் வயதுக்கிசைந்த இயைபினனென்று அவனை எண்ணுவார்கள். பால்யஸ்திரீகள் தம் அழகுக்கிசைந்த வெகு சுந்தர சுகுமார யௌவன லாவண்ய மன்மதனென்று அவனிடம் மயக்கம் கொள்ளுவார்கள். ஞானிகள் அவனை ஞான ஸ்வரூபியென்று நவிலுவார்கள். துஷ்டர்கள் தம் 'வள்ளல்' வெளியாகுமே யென்று கஷ்டங் கொள்ளுவார்கள்.

* * *

கீதநாதம்—குழலூதும் மகிமை.

ஆரியனைக் காணச் சூரியன் புறப்படுகின்றனன்: ஸ்ரீ கிருஷ்ணனுடைய கமல முகத்தின் விமலத்தையும் விலக்ஷணத்தையும் மலர்ச்சியையும் மகிமையையும் நோக்கி நோக்கி, தாமரையும் எவ்வளவுதான் மலர்ந்தபோதினும், அதன் ஆயிரத்தி லொருபங்கும் அமையவில்லை. உதய வேளையில் எல்லோரிதயமும் மகிழும்படி அதியற்புத திவ்ய தேஜோமயானந்தத்துடன், கிருஷ்ணன் வெளிப்புறப்படுகிறதுண்டு. இவன் புறப்படுகிறானென்று மற்ற ஆயர் சிறுவர்கள் மாடுகளை யோட்டிக்கொண்டு தெருவில் தயாராய்க் காத்துக்கொண்டிருப்பார்கள். தம் அருமைப் புதல்வனை யெப்படி பிரிந்திருக்கின்றதென்று அசோதை அன்பாய்க் கொடுக்கும் முத்தம் பெற்றுப் பகவான் வெளிப்புறப்பட்டு விடுவார். ஸ்வாமிகளும் ஆயர் சிறுவர்களும் பகற்பொழுதெல்லாம் வனத்திலேயே ஆடுவதும் பாடுவதுமாக விளையாடிக்கொண் டிருப்பார்கள். பொழுது போனதும் ஸ்ரீ கிருஷ்ணன் ஓரிடத்தில் வெகு ஒய்யாரமாய் நின்று கொண்டு தன் முகத்தின் அழகுக் கொத்த இசையின் இனிமையை வெளிக்காட்ட மூங்கிற் புல்லாங் குழலெடுத்துத் தம் அதரமாகிய மதுரக் கனியிடம் பொருத்திக் கீதமாகிற போதத்தை அனைவர் காதிலும் ஓதத் தலைப்படுவார்! ஹா ஹா என்ன சுகம்! என்ன மதுரம்! ஸ்வாமிகள் புல்லாங்குழல் ஊத ஆரம்பித்ததும், எங்கெங்கும் நிசப்தமே குடிகொண்டு விட்டது! நாலு பக்கங்களிலும் மேய்ந்து கொண்டிருந்த மாடுகள் கிருஷ்ணனைச் சுற்றி நின்றுவிடும்! புதர்களில் வசிக்கும் பாம்புகளும், மரங்களில் வசிக்கும் பறவைகளும், நீரில் வசிக்கும் மீன்களும், செடிகளும் கொடிகளும், சோலைகளும் சாலைகளும், எல்லாம் ஆனந்தமயமாய் சற்று முன் வதங்கியிருந்த பூக்களும் பொலிவு பெற்றுக் காண்கின்றன; நெருப்பு வீசிய காற்றும் குளிர்ந்து வீசுகின்றது! மாடே மயங்கிவிட்டதென்றால் மனிதர் மகிழ்வைக் கூற வேண்டுமோ! கோடைகாலம் நீங்கி மாரிகாலம் முடிவில் குளங்களும் ஏரிகளும் பூக்களும் இலைகளும் வெகு நன்னயத்துடனே உன்னதமடைந் திருப்பக் காண்பது இயற்கையே. கீதமாகிய நாத சுகத்தினால், குளத்தின் நீர் குளிர்ந்தும் பூவின் பொலிவு மிகுந்தும் இலைகள் பசுமையடைந்தும் விளங்குவது இன்றுதான் கண்டோம் என்று தேவர்கள் பூமாரி பொழிந்தனர். மனதிற் கிசைந்த மணமகனைக் கண்ட அனமெனு நடையாள் அகங்குளிர்வதுபோல், இயற்கை மாதின் இதயம் குளிரப் புயல்நிறப் புனிதன் தோன்றினதால் அவள் மகிழ்ச்சிமீறி செகிழ்ச்சி விளைத்தனள்! * * உடனே வத்ஸங்களையும் கோக்களையும் அழைத்துக் கொண்டு அனைவரும் வீடு சேருவார்கள்.

பிருந்தாவனம்.

எல்லாத் தலங்களிலும் உல்லாச மமைந்த பிருந்தாவனத் தருகில் நதிகட்கெல்லாம் பதியாகிய யமுனையாறு இருக்கின்றது! அது அதிபுண்யநதி; பக்தியே உருவங்கொண்ட சக்தி யுடையது. அனை

வோர் தாபத்தையும் பாபத்தையும் ஓர் கணத்தில்
வேரறுத்துவிடும்! இந்த தீர்த்தத்தில் ஓர்நாள் நீராடி,
சரச சல்லாபங்கொண்ட அரசிளங் குமரிபோல் ஒரு
சுந்தரவதி சொகுசாய் நடக்கின்றனள். இவள் அ
ழகை வர்ணிக்க யாவராலும் முடியாது! அதுகாறும்
வானோருலகம் உள்ளதோ இல்லதோ என்று ஐயம்
பூண்ட அனைவரும், தத்தம் சந்தேகங்களையொழித்து
இவள் தேவலோகத்துப் பாவையே பூமியில் வந்து
புதுமை விளைக்கின்றனள் என்னும்படி அழகும்
அந்தமும் பொற்பும் புகழும் வாய்ந்திருந்தனள்! மின்
னலைப் போன்ற நன்னிறம் பெற்றவள்; மேகம் போ
ன்ற கூந்தலுடையவள்! பங்கயத்தைப் பழித்த இங்
கித முகமும், தூநிலாப் பழித்த பூநிலா முறுவலும்,
மானை யிகழ்ந்த மருண்ட பார்வையும், கோட்டையை
நகைக்கும் குணம் பெறு நாசியும், வள்ளையை யேசிய
ஒள்ளிய காதும், முத்தே வந்து முத்து முத்தாடும்
ஒத்த பற்களின் உன்னத வரிசையும், கொவ்வை
யைக் கோபித்துக் கோலங்காட்டும் செவ்விய இத
ழின் சிறப்பும், காந்தளாகும் காதலப் பெருமையும்—
பார்த்து மகிழாதவர் அங்கொருவரு மிலர். இவள் ந
டையைப் பார்த்து அன்னம் அடங்கியது; பேச்சைக்
கேட்டுக் கிள்ளையும் நாணியது; இசையைக் கேட்
கின், நாமும் என்னுவமோ என்று குயிலும் எங்கிய
து. இவ்வளவு அந்த சந்தத்துடன் இவள் தோன்றிய
போதிலும், இவள் முகத்தின் மோகனம் தெய்வீக
மோகனமா யிருந்ததே யன்றி மனிதர்க் கொத்ததாய்
இனிமை பயக்கவில்லை. இப்படி இவள் வந்துகொண்
டிருக்கும் போது ஓர் விநோதங் கண்டாள்.

ராதா—கிருஷ்ணன்.

கடம்பமர மொன்றின்கீழ் அடங்கா ஆச்சரியம் வி
ளைத்துக்கொண்டுநீலநிறம்பொருந்தியகோலந்தாங்கி,
மாதர் மனத்தை மையலால் கொளுத்தும் வண்ணம்,
அதி சுந்தர மனோரஞ்சித மனமோஹன திவ்ய பால
ஸ்வரூபம் ஒன்று, பால் வடிந்த முகத்தில் நகை யரு
ம்பவும், மல்லிகை மலர்மாலை யணிந்த சிரத்தில் மயிர்
கள் நீண்டு சுருண்டு மணங்கமழத் தொங்கவும், கல்
லினும் வலிய நெஞ்சத்தைக் கணப்போதி லுருக்கும்
கடைக்கண் பார்வை விளங்கவும், அழகுக்கு அழகு
செய்யும் அமைதி யடைந்தும், அஞ்சா நெஞ்சர்களை
யும் வஞ்சனை செய்து வம்புக் கழைக்கும் பஞ்ச பா
ணங்களுடன் மன்மத னேவல் புரியவும் தட்டுக் கெ
ட்டுத் தடுமாறிக் கடலில் விழுந்து கலக்கங்கொள்
ளும் முட்டாள்களையும் கரைசேர்த்துக் கடைத்தேற்
றற் கென்று, அவ் வுருவம் அலையின் கண் வலை வீசு
வதுபோல் ஒய்யார சுகுமார உன்னதங் காண அந்த
மரத்தின்மீது ஒயிலாய்ச் சாய்ந்திருந்தது. இவ்விதம்
நின்ற கண்ணபிரானை ராதையும்கண்ணுற்றாள்; அன்
பனும் அவளை யின்புற நோக்கினான். உடனே இரு
வர் மனதும் ஒருமைவிளைந்தது; அன்பு பெருகி
ஆனந்தமாகியது; காதல் மிகுத்துக் கண்ணீர் ததும்
பிற்று; நேசம் பொங்கிப் பாசமாகியது. வீடு சேர்ந்
தாள் ராதை; கண்ணன்மீதே காதலாகினாள்; எண்
ணமெல்லாம் அவனிடமே யிருத்தினாள்; பக்தி
யடைந்தாள்; பரவசமாகினாள்; ஊணும் உறக்கமுந் த
விர்ந்தாள்; பாயும் படுக்கையுமானாள், மெய்யும் மெ
லிந்தது; கையும் துவண்டது; கலையும் நெகிழ்ந்தது;
வளையும் போயது: தியக்கங்கொண்டாள்; மயக்கமா
கினாள்.

ஜீவ—பரமாத்ம நேசம்.

இரவானதும் கண்ணன் குழல்கொண் டூதினான்!
அவ்வினிய ஓசை "ராதா! இங்கு வருவாய் எனக்குக்
கிருபை தருவாய்" என்பது போல் அவளுக்கு மாத்
திரம் கேட்டது. அனைத்தையும் துறந்து, கணவ
னாதி யோரையும் மறந்து, ராதா தன்தோழிகளுடன்
குழலோசை வரும் வழியே சென்றனள்; யமுனைக்
கரையில் ஜன சஞ்சாரமில்லாத ஓரிடத்தில் காதல்
செய்த கண்ணன் ஆதரத்தோடு நின்றுகொண்டி
ருப்பதைக் கண்ணுற்றாள். அவ்விடம் மிகவும் மனோ
கரமா யிருந்தது. சல்லாபஞ் செய்யும் பொல்லாத்
மல்லிகையும், அல்லல் நீக்கித் தொல்லை போக்கும்
முல்லை மலர்களும், நண்பர்க் குகந்த சண்பகப் பூவும்,
ராசாக்கள் மெச்சும் ரோசாக்களும், தன்மதியாளர்க்
கும் நன்மதி கூறும் மன்மதபாணமும், அமுதமுந்
தோற்கும் அருமையுற்ற கும்தப்பூவும் எங்கெங்கும்
விளங்குகின்றன. இளைப்புற்று வந்தோரின் களிப்
பை நீக்க அளிக்குலம் பாடுகின்றன; ஒயிலுடன்
மயில்கள் ஆடுகின்றன; கிள்ளைகள் சபாஷ் என்று
புகழ்மாற்றம் கூறுகின்றன. "நெல்லிற் குவளை
கண்காட்ட நீரிற் குமுதம் வாய்காட்ட, அல்லிக் கமல

முகங்காட்டும்" கழனிகளுக்கு அவ்விடம் சிறிதாயினும் தோற்றிருக்கவில்லை. இவ்வித அழகும் அலங்காரமும் அரசாளும் அருமையான இடத்தில் ஆத்மாவும் பரமாத்துமாவும் ஒன்றுவ தான உண்மைக்கு ஒரு சிறிதும் ஊனம் வாராதபடி கண்ணனும் ராதாவும் களிப்புறக் கண்டனர். இவர்கள் வருகைக்கென்றே பலவித பூக்களால் இசைத்த பொற்புள்ள விமானத்தில் இருவோரும் இருத்தலும், இயற்கை மாதின் இலகிய முகத்திற்குத் திலதமிட்டதுபோலாகியது. மன்னவ ரிருக்கும் மஹா மண்டபத்தில், எத்தனை விநோதம் எழிலுடன் காண்கினும், மன்னவர் வந்த பின்னரே மாட்சி யுண்டாவது போலவும் இங்கிதங்கள் தோன்றி இதயங்களிக்கத் திங்கள் எழுந்து திருத்தம் செய்வது போலவும், ஒவ்வொரு அழகும் ஒப்பற்றதே யென்ன உறுதி கூறிய, சுந்தரம் பெற்ற சந்திர ரிருவரும், ஒரே ஆஸனத்தில் வீற்றிருக்கக் கண்டு தேவர்களும் மூவர்களும் அளவில்லாக்களிப்பெய்தி, தேவகானஞ் செய்து பூமாரி பொழிந்தார்கள்.

ஆத்மார்ப்பணம்: ஹிதம் சோகம்.

இந்த சிறப்பைக் கண்ட ராதாவின் தோழியர்கள், ராதா கிருஷ்ணருக்கு மங்களம் பாடினர். கடைசியாய், ராதாவும், கண்ணனுக் கெதிரில் வணங்கி நின்றுகொண்டு, "என் இஷ்டத்திற் குகந்த ஸ்ரீகிருஷ்ணா! உனக்கு யான் கொடுக்கும் பரிசு யாதொன்றுமில்லை; நீயே யென் பொருளாயினை; உன்னை யன்றி உற்றபொருள் வேறொன்றும் ஏழையாகிய எனக்குக் கிடையாது, ஆகையால் என்னையே உனக்குச் சமர்ப்பிக்கிறேன். நீ என் பொருளாயினை; நான் உன் பொருளாயினன்! உனக்கோ, என்னைப்போல் பலரிருக்கக் கூடும்; எனக்கு உன்னைத் தவிர உற்றதுணை கிடையாது" என்று தன் அடங்காத அன்பையும், ஒப்பற்ற நேசத்தையும் இனிது விளக்கினள். பகவானிடத்தில் சேதனர்கள் எப்படி பக்தியையும் ப்ரேமையையுமே பரம சாதனமாய்க் கொண்டு முக்தியடைவது என்பதைத் தெளிவாய் விளக்குவதற்கே, பரத்துவப் பொருளின் இருவகைத் தத்துவங்களாய் கண்ணனும் ராதாவும் காசினியில், அவதரித்தனர் என்று கற்றோர் யாவரும் மெத்தப் புகழ்கின்றனர். அன்றியும், ஒரு நாள் ராதா தன் தோழியர்களுடன் ரமணீயமாய் பிருந்தாவனத்திற் போகுங்கால் ஸ்ரீகிருஷ்ணன் அதி யுன்னத ஸ்ருங்காரத்துடன் எதிர் நின்று, பிருந்தாவனத்திற் பிரவேசிப்போர் கப்பணங் கொடுத்தே செல்லல் வேண்டும் என்று மறுக்க, ராதா தன் கையிலொன்று மிலதென் என்பதை விநயமாய்த் தெரிவித்துக்கொண்டாள். "கைப்பணமொன்று மில்லாவிடின், ராதா, உன்னையே அர்ப்பணஞ் செய்வது தானே, உன் உடல் பொருளாவியனைத்தையும் எனக்கே தத்தஞ் செய்துவிடு" என்று கண்ணன் திருவாய் மலர்ந்தருளினன். இதனால் கடவுளை நேசித்துக் கடைத்தேற விரும்புவோர் உடல் பொருளாவியையும் முற்றத் துறந்து முதல்வனாகிற தலைவன் தாளிலே சமர்ப்பித்து விடுதல்வேண்டுமென்பது இனிது விளங்குகின்றது.

(இன்னும்வரும்.)

---

## REVIEW.

### "மதிகெட்டமனைவி." *

"அன்பொன்றுண்டானு லார்தான்பிழைக்கமாட்டார்!

"உள்மர்மமீதெனுளவு தெரியாமலுய்யு வகையிழந்துழல் கிறேமடிதோழி!"

மதிகெட்டமனைவி! கண்கெட்ட காம! மாயையில் வீழ்ந்த மானிடர்! அருளிலாச்சிவன்!! மருளிலாழ்ந்த மனிதன்! எப்படிச் சொன்னாலும் சரியே! உள்ளதை யுள்ளபடி யாராய்ந்து பார்த்தால் எல்லாம் பகவத்லீலை! குற்றமாய்ப் பார்க்கில் எல்லாங் குற்றமே! உண்மையாய் நோக்கில் எதுவும் உண்மை வழியுணர்த்துமோர் சின்னமாக விளங்கும். சாலையில் நடப்பவனுக்கு மைல்கல்லும் கைகாட்டி மரமும் வழிகாட்டி நிற்பதுபோல், சத்தியவழியாராய்ந்து செல்வோர்க்கு எதுவும் சத்திய வழியைக் காட்டும் அறிகுறியாகும். இங்கே ஒன்று இவ்வழி போகாதேயென்று எச்சரிக்கும்; அங்கே யொன்று இந்நுழைவழி யுனக்கேயென்று இயம்புவதுபோல் நிற்கும். சத்தியத்தின்மேலே கண்ணுயுள்ளவனுக்கு எதுவும் நல்வழி காட்டுவதாகும். சத்தியத்தை மறந்து மத, மோக, மாச்சரியாதிகளின் வசப்பட்டவனை

---

* "A Wife Condoned," by S. M. NATESA SASTRY, B.A., M. F. L. S.

இவை கொள்ளிவாய்ப் பிசாசுபோல் சதுப்பிலும், சேற்றிலும் கல்லிலும் முள்ளிலுமிழுத்துப்போய் நடுக் காட்டில் திசைதப்பித் திகைக்கும்படி விட்டுவிடும். ஐயோவென்றழுதாலு மிரங்காது! அப்பப்பாவென் றரற்றினு மசையாது, கைகூப்பித் தொழுதாலுங் கேளாது!

கற்பகம் என்னும் ஒருமாது தனவான் வயிற்றிற்பிறந்து எல்லாப்படிப்பும் கற்று அழகில்இரதிதேவியையொத்து விளங்கினாள். செல்வம் சகடக்கால் போல் சுழன்று வருவது இயல்பாதலால், இவள் பிறந்த பொழுது அதி சீமானாகவிருந்த இவள் தகப்பன் இவளுக்கு 17-வயதாகிக் கலியாணகாலம் நேர்ந்த பொழுது கைசளைத்து தன் அந்தஸ்துக்குத் தக்க கைப்பொருளின்றி மேல் வேஷமட்டும் குறைவறப்போட்டு வரத்தக்கவனா யிருந்தான். இவன் ஸ்திதியையுணர்ந்த இவனுடைய ஏக புத்திரியாகிய கற்பகம் பணச்செருக்கற்றும் மனச் செருக்குக் குறையாதவளா யிருந்ததால் கைசளைத்த வேளையில் காரியத்தின்மேல் கண்ணாயிருப்பது புத்திசாலிக் கடையாளமென்று "கைநிறைந்த பணத்திலும் கண் நிறைந்த கணவனே மேல்" என்கிற பழமொழிக்கு மாறாக, அழகிலும் தனமேவிசேஷம்; அதுவும் புத்தியோடு சேர்ந்திருந்தால் அதிலும் விசேஷம் என்று யோசித்து, தன் தகப்பனுடைய தோல்கிடங்கில் மானேஜராயிருந்து அவரிலும் மேலான செல்வாக்கும் பதவியும் பெறும் பாக்கியம் பெற்ற ஒரு வாலிபனை மணம் புரிந்துகொள்ள இசைந்து அப்படியேமணமுடிப்பிக்கத் தன்பிதாவை வேண்டினாள். அன்பில்லாவிவாகம் துன்பத்துக் கேதுவென்கிற உண்மையை மறந்து தனக்குள்ள அழகு படிப்பு இளமை இந்தச் செருக்கினால் தன் கணவனை எப்போதும் அடிமை கொண் டாளலாமென்று இவள் அவனை விவாகம் செய்துகொண்டாள். அவனோ உண்மையான உத்தமன், சத்குண சம்பன்னன். தன்னுடைய உழைப்பாலும் அபார புத்தியுத்தியாலும், தான் சொப்பனத்திலும் எண்ணாதபடி தனவந்தனானான். தோல்கிடங்கு முழுவதும் அவனுக்குச் சொந்தமாய் விட்டது. கோடீசுரனாய் விட்டான். ஸ்ரீதேவி அவன் கைவசமானாள். அவன் தன் தேவியாம் கற்பகத்துக்குக் கையாளானான். அவள் எள் என்று சொல்லுமுன் எண்ணெய் என்று முன் நிற்பான். அவள் இவனிடத்தில் அன்பில்லாமையால் என்னதான் செருக்காய் நடந்துகொண்டாலும், இவனுக்கு அவளிடத்து உண்மையான உள்ளன்பிருந்தபடியால், இவன் அதை யெல்லாம் அவள் சுபாவமென்று பாராட்டாது தள்ளிக்கொண்டு போனான். அவளிடத்தி லிவனுக்கிருந்த உள்ளன்பின் மகிமையால் அவளுடைய எடாகோடத்தனங்களெல்லாம், இவனுக்கு ஏதோ குற்றமற்ற கோணற்றனமாகப்பட்டது. அவளுக்கு இவனிடத்திலுள்ளன்பின்மையால் இவன் உத்தமகுணங்களும் பாவனைகளும் அவளுக்கு அருவருக்கத்தக்க அடிமைக்குணங்களாகப் பட்டன. இப்படிப்பட்ட தாம்பத்யம் வாய்ந்த இல்லறதர்மம் எத்தனை நாளைக்கு இழுக்கின்றி நடக்கும்? 15, 16-வருஷங்களாய் விட்டன. இவன் தோல்கிடங்கு வேலையில் முற்றும் தன் மனத்தைச் செலுத்தி குவியல் குவியலாகப்பணத்தைத்தேடினான். அவள் குடி கெடுக்கும் கோமாளிப்பேயன் எவனையோ கண்டு அவன் வெளிப் பகட்டில் அகப்பட்டு மயங்கி மானிடப்பதராம் அவனை மன்மதாவதாரமாக எண்ணி தற்காப்பை விட்டு அவன் கைப்பட்டு கற்பையிழந்து காமப்பேய் பிடித்து, மானாவமானத்துக்கு மிஞ்சி அதில் தலைகால் தெரியாமலிழிந்து வந்தாள்.

இந்த அக்கிரமம் எத்தனை நாளைக்கு நடக்கும். சிறுகச்சிறுக இது வெளியாயிற்று. ஆனால் அவளழகில் விழுந்து மயங்கிய அவள் புருஷனுக்கு இவள் செய்கை யொன்றும் தெரியவில்லை. தெரியக் காரணமான சந்தேகங்களுதித்தும் அதை யெல்லாம் அவன் மனோதர்மம் நல்லதாயிருந்ததால் தப்பொன்றும் நினைக்க அவனால் சாத்தியமில்லை. கொலையும் வியபசாரமும் என்ன மூடி மூடி வைத்தாலும் கடைசியில் அவை வெளியாகாமற் போவதில்லை. தெய்வத்திற்கே யிது பொறுக்காததுபோல், அவள் ஒரு நாள் தன் கணவனுக்கும் காமத்தலைவனுக்கும் கடிதமெழுதவட்கார, அவளை யறியாது புத்தி மயங்கி, மறதியால் காமத்தலைவனுக் கெழுதிய கடிதத்தை கணவனுடைய விலாச மெழுதிய லகோடாவிலும், கணவனுக் கெழுதியதை காமத்தலைவன் விலாசத்துக்குமாகத்தடுமாறிப் போட்டனுப்பி விட்டாள். இக்கடிதத்தைப் பார்த்தான் கணவன்! "என் அன்பின் களஞ்சியமே!" என்று தன் காதல்மனைவி

தன்னை யொருநாளு மழைத்திலளாயினும், யாரோ அந்நியனை அப்பெயராலழைத்து அவன் குடியிலிருந்து அவன் கைப்பணத்தைச் செலவிட்டுக் கொண்டே அவன் பேர், புகழ், மானம் உயிர் எல்லாவற்றையும் ஒருங்கே கெடுத்து வருகிற சங்கதி தெரிந்தது. துடித்தான்! திகைத்தான்! பிரமித்தான். உள்ளுக்குள் அழுதான், தன்னை வெறுத்தான், அச்சதிகாரியை விட்டேனா பாரென்று கருவினான். கொல்லவும் நினைத்துத் தன் மாளிகை திரும்பினான். அவளைக் கண்டான்! கடிதத்தைக் காட்டினான்? வெருட்டினான், உருட்டினான், குரவளையைப் பிடித்து நெறித்தான். "உன் காதற்களஞ்சியம் யார்?" என்று அதட்டினான், ஒன்றும் பலிக்கவில்லை: காரியம் மிஞ்சிப்போய்விட்டது. கொலை விழுந்தாலும் விழுமேயன்றி இவன் குலத்தைக் கெடுத்தவன் பேர் வெளியாகிற வழியைக்காணோம்! இச்சமயத்தில் இவன் தன்னுயிரிலும் மேலாக மதித்த இவன் செல்வப்புத்திரிவா அக்குழந்தையின் பொருட்டு இப்பாதகியைக்கொன்று ஸ்ரீஹத்தி தோஷமும் வாங்கிக்கட்டிக்கொள்வதில் பயனென்ன வென்று தன்னெண்ணத்தை மாற்றினான். உற்றவிடத்துதவுவான் நேசனாதலால், தன்னுயிர்த் தோழனை நாடிச்சென்றான். இருவரும் சேர்ந்து தங்கள் உயிர்க்குயிராம் தோழனும் வேதாந்தியும் மஹாத்மாவுமாகிய ஜீவசித்தியிடம்சென்றார்கள். அவரோடு ஆலோசனை செய்யவே, புத்தி சமாசப்பட்டு, வீண்பழி பாவங்களுக் காளாவதில் பிரயோசன மில்லை யென்று தீர்மானித்து, அவளை மனதாலொதுக்கி குழந்தையின் விவாகக்காலம் வரையில் மேலுக்கு அவள் குற்றத்தை மூடிவைத்து ஆதரித்து வரத் தீர்மானித்து வீடுசென்றான். அதற்கும் அவள் உடன்பட்டாளில்லை. காமம் தலைக்கேறி அவள் தன் குழந்தையையும் மறந்து தன் "காதற்களஞ்சியமே" தனக்குத் தஞ்சமென்று அவனிடம் போகப் புறப்பட்டாள். நடுநிசியென்றும் பார்க்காமல் அவள் தன்னந்தனியே தனிவழி நடந்து தன் காமத்தலைவனை யடைந்துவிட்டாள். காமத்தலைவன் வந்தான். நடந்ததைக்கண்டான். காரியங்கெட்டதென்று ஆலோசித்தான். இவளைக்கட்டிக்கொண்டு அழுவதயாரென்று நினைத்தான். நினைத்ததும் அவளுக்கு ஹிதோபதேசம் சொல்லத்தலைப்பட்டான். சன்மார்க்கம் பேசினான்: துன்மார்க்கம் இரகசிய மாயுள்ளமட்டுமே செல்லும், இரகசியப்போர்வை கிழிந்துபோனால் துன்மார்க்கம் பலிக்காது என்றான். அவளைக் கடிந்து கொண்டான். அவளிடத்தில் தனக்கன்பில்லை யென்பதை நன்றாகக்காட்டினான். தன்னை நம்பி அவள் கணவனைவிட்டு வந்ததற்காக அவளை ஏசினான். இவன் சுபாவத்தை இப்பொழுது அவள் உள்ள துள்ளபடியறிந்து கொண்டாள். இந்த மானிடப் பதரை மன்மதாவதாரமாக எண்ணி எல்லாவற்றையும் இவனுக்காக விட்டொழித்தோமே, நம் புத்தி யென்ன புத்தி யென்று கற்பகம் தன்னைத் தானேயிகழ்ந்து கொண்டாள். இகழ்ந்துகொண்டு இப்பாதகன் மாளிகையில் இனி ஒருக்ஷணந் தங்கினாலும் இவன் பாவம் நம்மையும் பீடிக்குமென்று அவனோடு சொல்லாமல் அவன் விடுதியை விட்டுச்சென்றாள்.

(இன்னும்வரும்.)

C. V. S.

---

## The Bell of the Tower of Justice.

## ஆலாசமணி.

ஒரு காலத்தில் ஒரு அரசன் இருந்தான். அவன் உண்மையாகவே மிகவும் அசாதாரணமான அரசனாக இருந்தான். அவன் பெருமை உள்ளவனாயும் சுயநயம் பாராட்டுகிறவனாயும், அநீதிமானாகவும் இருந்தவனல்ல. மற்ற அரசர்கள் அப்படியிருக்க விரும்புகிறார்கள். தன் குடிகளுக்கு நன்மை செய்யும் பொருட்டு மாத்திரம் அவன் ஜீவித்திருந்தான்.

இந்த அரசன் ஒரு பெரிய தர்மாலயம்கட்டி வைத்து அதற்கு டவர் ஆப் ஜஸ்டஸ் (Tower of Justice) என்று பேரிட்டான். பிற்பாடு அவன் தன் முக்கிய மந்திரியினிடத்தில் (Prime-minister) சொன்னதாவது அந்தச் சிறைச்சாலையில் ஒரு மணியைத் தொங்கவிட்டு அங்கே கேடிழைக்கப் பெற்றவனாவது நியாயம் வேண்டியவனாவது வந்து அந்தமணியை

அடிக்கவேண்டும். ஏனென்றால் நம்முடைய ராஜ்யத்தில் அவன் எவ்வளவு கொடிய பாதகனா யிருந்தபோதிலும் அவனுடைய குறையைக் கேட்டு அவனுக்கு நியாய மளிக்கவேண்டும் !! என்றான்.

அவர் சொன்னது போலவே அந்த மந்திரியும் செய்தான். பிறகு மற்றவர்களினாலாவது அல்லது சட்டங்களினாலாவது ஏதாவது மனிதன் கெடுக்கப்பட்ட பொழுது அவன் வந்து தர்மாலயத்தில் (Tower of Justice) கட்டித் தொங்குகிற மணியை அடிப்பான். பிறகு அந்த அரசன் தன் வித்வான்களோடு கூடி அவனுடைய குறையைக்கேட்டு அவனுக்கு நீதியளிப்பான். அநேகம்நாள் உபயோகித்ததினாலே அந்த மணியின் நாவில் கட்டித்தொங்கிய கயிறினுடைய அடி நுனியானது தேய்ந்து அறுந்து போயிற்று. அதை நீளச்செய்கிறதற்கு காட்டு மிந்திரியினுடைய ஒரு துண்டை அந்த நுனியில் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தது. நீடித்த நாளாகவும் நன்றாயும் உழைத்த ஒரு குதிரையை அந்த மந்திரி வைத்திருந்தார். ஆனால் அது கிழடாயும் உபயோகம் இல்லாததாயும் போனதினால் அதைப்பற்றிக் கவலை யெடுத்துக் கொள்வதற்கில்லை; ஒரு தரிசு நிலத்தில், (Barren land) அதை ஓட்டிவிட்டுச் சும்மா இருந்துவிட்டார். அங்கே அதன் வயிற்றுக்கு புல் அகப்படாமல் அது ஒருநாள் பசி முற்ற கயிற்றிலிருந்து மிந்திரிக்கொடி தொங்குகிறதைக் கண்டு தன் தலையை உயர்த்தி நீட்டி அதைக் கடித்திழுத்தது. உடனே மணி ஓசை கேட்டது: அரசன் ஜனங்களுடைய சௌகரியத்திற்கு என்னகுறை நேர்ந்ததோ என்று நினைத்துக்கொண்டு அந்த தர்மாலயத்தைச் சேர்ந்து உடனே தன் மந்திரிக்கு ஆள் அனுப்பி வித்வான்களையும் அழைத்து மணி அடித்ததின் காரணத்தை அறிய அந்த நியாயஸ்தலத்தில் எல்லாரும் கூடியிருந்தார்கள். அந்த முதல் மந்திரியினுடைய பசிமிகுந்த குதிரை காட்டு மிந்திரிக் கொடியை இழுத்ததனாற்றான் அம்மணியோசை கேட்டது என்று தெரியவரவும், எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். முக்கிய மந்திரி வெட்க மடைந்தான், அந்த அரசன் சொன்னதாவது அந்த வாயிலாச்சிவனுங் கூட நியாயத்திற்கு என்னிடத்தில் வந்திருக்கிறது. அதற்கு நியாயம் கிடைக்க வேண்டும் ! என்ன சொல்லுகிறீர் ! என்று வினவினான். சற்று தன்னுள் ஆலோசனை செய்தபின் பார்த்துத் திரும்பி அவர் சொன்னதாவது: அதனுடைய இளம்வயதில் உமக்கு அன்பாய் உழைத்த ஒரு சிறந்த பிராணியை அதனுடைய கிழட்டு வயதில் அசட்டை செய்த நீர் என்னுடைய ராஜ்யத்தில் நியாய பரிபாலனம் பண்ணிவர நான் எப்படி உம்மை நம்பக்கூடும் ? என்றான். அதற்கு அந்த மந்திரி மறுமொழி சொன்னதாவது: "நியாயம் செய்யும்படி மற்றவர்களை நான் வைராக்கியமாய் கட்டாயப்படுத்தி வருகையில் நானே அநீதியா நடந்துவிட்டேன்; ஆதலால் என் எஜமானனாகிய ராஜாவுக்கு ஊழியம் செய்ய அபாத்திரனா யிருக்கிறேன் என்றான்.

அதை யொப்புக்கொண்டு அரசன் பின்னும் சொன்னதாவது: "உன் இளமைப் பருவத்தில் நீயும் கூட நன்றாய் ஊழியம் செய்திருக்கிறாய்: உன்னுடைய வயது காலத்தில் என்னுடைய வேலையில் இருந்து நீ தள்ளப் படமாட்டாய். அப்படியானால் நானும் கூட அநீதியாய் நடந்து விடுவேன். யார் ஒருவன் ஜீவகாலமுழுதும் நன்றி அறிதலாய் இருக்கிறானோ அவன் ஒரு தப்பிதத்திற்காக தள்ளப்படமாட்டான்."

ஆதலால் அந்த ஞானமுள்ள ராஜன் தன் முதல் மந்திரியை மறுபடியும் வேலையில் வைத்துக்கொண்டான். நியாய ஸ்தலத்தில் மணி அடித்த குதிரை அது முதல் தன் பழைய எஜமானனால் பட்சமாய் காப்பாற்றப்பட்டது.

மே. ப. ம. இராமலிங்கம்.

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியத்துக்குரிய சந்தாவைச்செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல்வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தாதொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

*20th May*, 1903. அ. ப. ஏஜன்ஸி.



## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. 5½ As. ; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s. 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளபான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ. சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசானகாகிதப்பதிப்பு:–:** சாதாரணமாய்எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறுமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சாந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும் போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.